



சிவமயம்.

# சைவசமயவிளக்க வினாவிடை.



## முதலாவது.

வினா, சைவமென்பதற்குப் பொருளென்ன?

விடை, சிவசம்பந்தமானது சைவம்.

## ௨-வது.

வினா, சிவமெத்தன்மையுடையது?

விடை, ஆதியந்தமில்லாததும்; உருவருவில்லாததும், குணங்குறியில்லாததும், எங்கு நிறைந்துள்ள பரிபூரணமானதும், தனக்கு மேலொரு கடவுளில்லாததும், மனோவாக்குக் கெட்டாததும், உயிர்க்குயிரா யிருப்பதும், இவை முதலான அளவிறந்த தன்மையை யுடைய நிஷ்களப் பொருளா யிருக்கின்றது.

## ௩-வது.

வினா, கடவுளொருவரிருக்கிறா ரென்பதற்குச் சாட்சியென்ன?

விடை, அவராலுண்டாக்கப்பட்ட உலகமே சாட்சியாயிருக்கின்றது. எப்படியெனில் இவ்வுலகந்தானே யுண்டானதா ஒருவரா லுண்டாக்கப் பட்டதாவென்று விசாரித்தால் உலகஞ் சடமாகையினாலேதானே யுண்டாகமாட்டாது அதலால் ஒருவரா லுண்டாக்கப்பட்டதென்று நிச்சயப்படும் இவ்வளவு பெரியகாரியஞ் செய்தவர் சர்வவல்லமையுமுள்ளவராதலால் அவரே கடவுளென்று தெரியலாகும்.

ச-வது.

வின, இப்படி நிஷ்களப் பொருளாயிருப்பது உலகத்தை எப்படி யுண்டாக்கும் அன்றியும் அதை நாம் எப்படி பாவனைசெய்து தொழுது துதிக்கலாம்?

விடை, நாம் பாவனைசெய்து தொழுது துதித்தற்பொருட்டு அந்தச்சிவம் கமளீகரித்துத் தனது திருவருளே பராசத்தி சொரூபமாக இடப்பாகத்தில் வைத்தருளிய ஸ்ரீகயிலாசபதியாய் வீற்றிருக்கின்றது. மேலும் சிருட்டி, திதி, சங்கார மென்னும் முத்தொழில்

நடத்தும் பொருட்டு பிர்மா, விஷ்ணு, ருத்திரனென்னும் திருமூர்த்திகளாயுமிருக்கினறது.

௫-வது.

வினா, நிஷ்களப்பொருளித்தன்மையானதென்பதுஞ் சகளப்பொருளித்தன்மையானதென்பதும் நாம் தொழவேண்டிய கிரமமின்னதென்பதும் எதினால் தெரிந்துகொள்ளலாம்?

விடை, வேதம், ஆகமம், புராணம், சாத்திரங்களால் தெரிந்துகொள்ளலாம்.

௬-வது.

வினா, வேதங்களென்பன வெவை?

விடை, இருக்கு தைத்திரியம், அல்லது யசுர், சாமம், அதர்வணம், என்னும் நான்குமாம்.

௭-வது.

வினா, இதுவுமன்றி இன்னும் வேதங்களுண்டா?

விடை, ஆயுள்வேதம், அருத்தவேதம், தனுர்வேதம், காந்தருவவேதம் என உபவேதங்கள் நான்கும், மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம் சோதிடம் என ஆறு வேதங்களும் உண்டு.

௮-வது.

வினா, ஆகமங்களென்பன வெவை?

விடை, காமியம்-யோகஜம்-சிந்தியம்-காரணம்-அசிதம்-தீப்தம்-சூக்குமம் சகஸ்திரம் அஞ்சுமான்-சுப்பிரபோதகம் ரௌரவம்-மகுடம்-விமலம் சந்திரஞானம்-விம்பம் புரோக்கீதம்-இலளிதம்-சித்தம் சந்தானசர்வோத்தமம் பாரமேசுரம்-கிரணம்-போதம்-வாதுளம் என்னும் இருபத்தெட்டுமாம்.

௯-வது.

வினா, புராணங்களென்பனவெவை?

விடை, சைவம்-காந்தம் இலிங்கம் கூர்மம்-வாமனம்-வராகம்-பௌஷியம்-மச்சியம்-மார்க்கண்டேயம்-பிரமாண்டம்-நாரதீயம்-பாகவம்-காருடம் வைணவம்-பிரமம்-பதுமம்-பிரமகைவர்த்தம்-ஆக்கினேயம் என்னும் பதினெட்டுமாம்.

௰-வது.

வினா, இந்தப் புராணங்களிற் பிரிவுண்டோ?

விடை, சிவபுராணம விஷ்ணுபுராணம் பிரமபுராண

ம் சூரியபுராணம் அக்கினிபுராணம் என
ஐந்து பிரிவுண்டு.

கக-வது.

வினா, சிவபுராணமென்பன வெவை?
விடை, சைவம்-காந்தம் இலிங்கம்-கூர்மம்-வாமனம்
வராகம் - பௌஷியம்-மச்சியம்- மார்க்கண்
டேயம் பிரமாண்டம் என்னும் பத்துமாம்.

கஉ-வது.

வினா, விஷ்ணுபுராணமென்பன வெவை?
விடை, நாரதீயம்-பாகதம்-காருடம்-வைணவம் என்
னும் நான்குமாம்.

கங-வது.

வினா, பிரமபுராணமென்பன வெவை?
விடை, பிரமம், பதுமம் என்னும் இவ்விரண்டுமாம்.

கச-வது.

வினா, சூரியபுராணமென்பது யாது?
விடை, பிரமகைவர்த்தம் என்பதாம்.

௧௫-வது.

வினா, அக்கினிபுராணமென்பது யாது?
விடை, ஆக்கினேயம் என்பதாம்.

௧௬-வது.

வினா, இன்னமிவைபோன்ற புராணங்களுண்டோ?
விடை, உபபுராணங்க ளென்றுண்டு.

௧௭-வது.

வினா, அவைகளெவை ?
விடை, உசனம்-கபிலம்-காளி-சனற்குமாரம் சாம்பவம-சிவதன்மம்-சௌரவம் தூர்வாசம்-நந்தி நாரசிங்கம்-நாரதீயம்-பாராசரம்-பார்க்கவம ஆங்கிரசம் - மாரீசம்-மானவம்-வாசிட்டலைங்கம் வாருணம் என்னும் இந்த பதினெட்டுமாம்.

௧௮-வது.

வினா, சாஸ்திரங்களென்பன வெவை?
விடை, வேதாந்தம் வைசேஷிகம் பாட்டம் பிரபாகரம் பூர்வமீமாம்சை உத்தரமீமாம்சை என்னும் இவ்வாறுமாம்.

௧௯-வது.

வினு, இவைகளிற் சைவசமயத்துக்கே உரியவை எவை?

விடை, மேற்கூரியவையெல்லாம் உரியவைகளே ஆயினும் ஆகமங்களே சிறந்த உரியவைகளாம்.

௨0-வது.

வினு, இந்த ஆகமங்களில் சைவ சமயத்தைக் குறித்து முக்கியமாகச் சொல்லுகிற விஷயம் யாது?

விடை, பதிபசுபாசங்களி னிலக்கணத்தையுஞ் சரியை கிரியை யோகம் ஞான மென்னும் நான்கு பாதங்களின் முறைமையையுஞ் சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சிய மென்னும் நாலுபதத்தையும் இன்னுமதற்குரிய அநேக விஷயங்களையுஞ் சொல்லுகின்றது.

௨௧-வது.

வினு, பதியாவது எது?

விடை, மேற்கூறிய நிஷ்களப் பொருளே பதியாம்.

௨௨-வது.

வினு, பசு எத்தன்மையுள்ளதாயிருக்கின்றது?

விடை, அளவிடற்கரிதும் நித்தியத்துவமுள்ளதும். மலவிருளின் மறைந்திருப்பதும், பரமசிவனுடைய திருவருளாலிருவினைக்கீடான சரீரமெடுத்துப் பலவாகிய புவனபோகங்களை அனுபவித்தற்கு ஏதுவாகிய புண்ணியபாவங்களைச் செய்து பிறப்பிறப்புள்ளதும், சிவபுண்ணியமேலிட்டால் இருவினையொப்பு மலபரிபாகமுண்டாகுங் காலத்தில் குருவருளாற் சிவத்தைச் சேர்வதுமா யிருக்கின்றது.

உக-வது.

வினா, பாசம் எத்தன்மை யுள்ளதாயிருக்கின்றது.

விடை, ஏகத்துவமும், நித்தியத்துவமும், அளவிறந்த வல்லமையுள்ளதும், செம்பிற் களிம்பு போலச் சீவனைப்பற்றி அறிவுமுழுவதையும் மறைப்பதும், சிவபுண்ணிய மேலிட்டால் பக்குவப் படுவதும், இரவினிருளிலும் அதிகவிருளாவதுமா யிருக்கின்றது இரவினிருள் தன்னைக் காட்டிக்கொண்டு உலகத்தை மறைக்கும் ஆணவ இருளானது தன்னையுங் காட்டாமல் பதிபசுபாசங்களையுங் காட்டாமலிருப்பது.

உ௪-வது.

வினா, சரியையாவதென்ன?

விடை, சிவாலயங்களிற் பயபக்தியுடனே திருஅலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கிடுதல், நந்தவனம் வைத்தல், பூமாலை தொடுத்துச் சாத்துதல், பூசனைபுரிதல், சிவதரிசனஞ்செய்தல், சிவனடியார்களுக்கு வந்தனைவழிபாடு செய்தலாம் அலகு துடைப்பம் மெழுகு சாணம்.

உ௫-வது.

வினா, சரியை யநுஷ்டித்தவர்கள் எப்பதத்தையடைவார்கள்?

விடை, சாலோகபதமடைவார்கள்.

உ௬-வது.

வினா, சாலோகபதமாவதென்ன?

விடை, சிவலோகத்திற் போயிருப்பது.

உ௭-வது.

வினா, கிரியையாவதென்ன?

விடை, வேதாகமவிதிப்படி பரமசிவனுக்குத் திருமஞ்சனஞ்செய்து நல்ல பத்திரபுஷ்பங்களா

ல் அருச்சித்துத் தூபதீபநிவேதனங்கள்செய்து அன்புடன்தொழுது துதிக்கலாம் இவ்வாறு கிரியை அனுஷ்டித்தால் சாமீபபதமடைவார்கள், சாமீபபதமென்னவெனில் பரமசிவனுக்குச் சமீபத்திலிருப்பது.

உஅ-வது.

வினா, சிவபூசைசெயத்தக்க மூர்த்தங்களெவை?

விடை, மானதம் மண்டலம் மலையிலும் படத்திலும் சுவரிலும் எழுதிய சித்திரங்கள் விக்கிரக சொரூபங்கள் படிகலிங்கம் பாணலிங்கம் க்ஷணிலிங்கம் இவை முதலியவும் பூசிக்கத்தக்க மூர்த்தங்களாம்,

உகூ-வது.

வினா, மானதபூசையாவதென்ன?

விடை. மனதினாலே அபிஷேக முதலாகிய் பூசையைப் பாவனையாக செய்யலாம்.

௩௰-வது.

வினா, மண்டலபூசையாவதென்ன?

விடை, மண்டலேசுரரைப் பூசிக்கலாம்,

௬௧-வது.

வினா, க்ஷணிகலிங்கபூசை யாவதென்ன?
விடை, பார்த்திபலிங்க பூசையாம்.

௬௨-வது.

வினா, இந்தப்பூசைகளிற் சிறந்தது எது?
விடை, படிகலிங்க பூசையும் பாணலிங்க பூசையுமே சிறந்தது.

௬௩-வது.

வினா, பாணலிங்கமென்பவை யாவை?
விடை, பாணனென்றொரு அன்பனாலே பூசிக்கப்பட்டவையாம்.

௬௪-வது.

வினா, இவ்விலிங்க மெவ்விடத்திலிருக்கின்றன?
விடை, கண்டகியென்னும் நதியில் எடுக்க எடுக்க மாறாமலிருக்கின்றன.

௬௫-வது.

வினா, இந்தப்பூசைகளால் அடையும்பயனென்ன?
விடை, கங்கைமுதலிய புண்ணியநதிகளில் ஸ்நானஞ், செய்தபலனும், ஸ்தலங்கள்க்ஷேத்திராடனஞ் செய

று தரிசிக்கும் பலனும், சோடசதான பலனும், இருபத்தொரு யாகபலனுங் கிடைக்கும் மகாபாதகங்களெல்லாந் தீரும்.

கூசு-வது.

வினா, கங்கை முதலிய புண்ணியநதிக ளென்பன எவை?

விடை, கங்கை யமுனை சரஸ்வதி நருமதை காவேரி குமரி கோதாவரி என்னுஞ் சத்தநதிகளும் சிந்து தாமிரபரணி கிருஷ்ணை துங்கபத்திரி முதலாகிய நதிகளுமாம்.

கூஎ-வது.

வினா, புண்ணியஸ்தலங்க ளென்பனவெவை?

விடை, திருஞானசம்பந்த சுவாமிகள் அப்பர்சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்னும் சமயாசாரிகள் திருப்பதிகம்பெற்று விளங்கும் ஸ்ரீகயிலாச முதலிய ஆயிரத்தெட்டு ஸ்தலங்களுமாம்.

கூஅ-வது.

வினா, மேற்கூறிய ஆயிரத்தெட்டு ஸ்தலங்களும் இப்போது பதிகங்களிருக்கின்றனவா?

விடை, உ௭௪ ஸ்தலங்களுக்கிருக்கின்றன, இந்தஸ்தலங்கள் சோழநாட்டில் க௯௰. பாண்டியநாட்டில் கச. மலைநாட்டில் க. ஈழநாட்டில் உ. கொங்குநாட்டில் எ. நடுநாட்டில் உஉ. தொண்டைநாட்டில் ௩௨. துளுவதேசத்தில் க. வடக்கில் ரு. இப்போது எத்தனை பதிகங்களிருக்கின்றன வென்னில் அ௱ பதிகங்களாம் இதன் விவரமெல்லாம் பின்னாலே காட்டப்படும்.

௬௰௧-வது.

வினா, சோடசதான மென்பன வெவை?
விடை, அன்னதானம், வஸ்திரதானம், கன்னிகாதானம், பூதானம், இரணியதானம், கோதானம், உபயமுகிதானம், மகிஷதானம், அஸ்வதானம் உலோதாஸ்வதானம், காலதானம், காளாமுகிதானம், மகமேருதானம், கற்பகவிருக்ஷதானம், வித்தியாதானம், மகாதானம் என்னும் பதினாறுமாம்.

௬௰௨-வது.

வினா, யாகம் இருபத்தொன்றுவது யாது?

விடை, அக்கினிட்டோமம் அத்தியக்கினிட்டோமம் உத்தியம் சோடசிவாசபேயம் அத்திராத்திரம் அப்தோரியாமம் அக்கினியாதேயம் அக்கினிகோத்திரம் தரிசபூரணமாசம் சாதுர்மாசியம் நிரூடபசுபந்தம் ஆக்கிரயணம் சௌத்திராமணி அட்டகை பார்வணம் சிராத்தம் சிராவணி ஆக்கிரகாயணி சைத்திரி ஆசுவயுசி இருபத்தொன்றுமாம்.

சகவது அ.

வினா, மகாபாதகங்களென்பன வெவை?

விடை, கொலை களவு பொய் கள்ளருந்தல் குருநிந்தை என்னு மைந்துமாம், இந்தப் பாதகங்களால் நரகவேதனையுண்டாகும். பிரர் மாதரை யிச்சித்தல் பிறர் செல்வத்தைக் கண்டு பொறாமை கொள்ளுதல், 'அப்பொருளை யபகரிக்கவெண்ணுதல், கோபம், கொடுஞ்சொல் மூர்க்கம் வஞ்சகம் ஒருவர் தனக்குச் செய்த உபகாரத்தை மறத்தல் சினேகத்தைப் பிரித்தல் இரக்கமில்லா இவைகளாலும் நரகவேதனை யுண்டாகும்.

சஉ-வது.

வினா, யோகமாவதென்ன?

விடை, பஞ்சேந்திரியங்களின் வழியிலே மனதைச் செல்லவொட்டாமல் ஒருவழிப்படுத்தி நிஷ்டை கூடியிருப்பதாம்.

சரு-வது.

வினா, அந்தயோகம் எத்தனைவகை?

விடை, இயமம்-நியமம்-ஆசனம்-பிராணாயாமம்-பிரத்தியாகாரம்-தாரணை-தியானம்-சமாதி என எட்டாம்.

சச-வது.

வினா, யோகத்தினாலடையும் பதமெது?

விடை, சாரூபபதம்.

சடு-வது.

வினா, சாரூபபதமாவதென்ன?

விடை, பரமசிவனைப்போல சடைமுடி-காளகண்டமுஞ் சதுர்ப்புசம்-திரிநேத்திரம் பெற்றிருப்பதாம்.

௫௰-வது.

வினா, வித்தியாதத்துவ மெத்தனை?

விடை, காலம்-நியதி-கலை-வித்தை-இராகம்-புருடன் மாயை என்னும் ஏழுமாம்.

௫௧-வது.

வினா, சிவதத்துவ மெத்தனை?

விடை, சுத்தவித்தைஈச்சுரம் - சாதாக்கியம் - சத்தி- சிவம் என வைந்துமாம்.

௫௨-வது.

வினா, ஞானத்தினெல்லையும் பதமெது?

விடை, சாயுச்சியபதமாம்.

௫௩-வது.

வினா, சாயுச்சியபதமாவது என்ன?

விடை, பரமசிவனோடுகலத்தலாம்.

௫௪-வது.

வினா, சரியைமுதலாகிய நான்கினும்மேலானதெது

விடை, ஞானந்தான் மேலானது.

ருரு-வது.

வினு, ஞானம் மேலானதா யிருக்க அதை யனுஷ்டியாமல் மற்றமூன்றையு மனுஷ்டிப்ப தென்ன?

விடை, அம்மூன்றையும் விதிப்படி அனுஷ்டிக்காலே ஞானம் விளங்கும்.

ருசு-வது.

வினு, அதற்குப் பிரமாண முண்டோ?

விடை, அம்மூன்றையும் அனுஷ்டித்து ஞானம் பெற்ற பெரியோர்கள் சொல்லியிருப்பதே அதற்குப் பிரமாணமாம்.

ருஎ-வது.

வினு, அவர்கள் சொல்லியிருப்ப தென்னபாடல்?

விடை. மூர்த்திதலந்தீர்த்தமுறையாத்தொடங்கினர்க்கோர், வார்த்தைசொல்லச் சற்குருவும்வாய்க்கும் பராபரமே, விரும்புசரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும், அரும்புமலர் காய்கனிபோல் அன்ரோ்பராபரமே, எனத்தாயுமான சுவாமிமுதலானவர்கள் சொல்லியிருப்பதாம்.

முதற்பிரிவு முற்றிற்று.



சிவமயம்.

# இரண்டாம்பிரிவு.



## முதலாவது.

வினா: ஆலயங்களிலிருக்குஞ் சொரூபங்களினிடமாய்ப் பரமசிவன் ஏதாவது மகத்துவங் காட்டியிருக்கிறாரா?

விடை. புண்ணியஸ்தலங்களில், இருக்கும் ஆலயங்களிலேயெல்லாங் காண்பித்திருக்கிறார், ஆனால் சிவபுண்ணியஸ்தலங்களில் நடத்திருக்கிற மகத்துவமாத்திரம் பிரசித்தமாய் வழங்கப்பட்டிருக்கின்றது.

## ௨-வது.

வினா, எந்தஸ்தலங்களில்?

விடை, திருக்கடை யூரிலே மார்க்கண்டேயருக்காகச் சிவலிங்கத்தினிடமாய்த் தோன்றி யமனை யுதைத்து அவருக்கு என்றும் பதினறுவய

தாக அருளிச்செய்தார் காளாஸ்திரியில் கண்ணப்ப சுவாமிகளுக்குச் சிவலிங்கத்தினிடமாகத் தெரிசனங் கொடுத்து மோக்ஷமருளினார். திருவானைக்காவலில் ஒரு சிலந்திப்பூச்சிக்குச் சிவலிங்கத்தினின்றுந் தரிசனமாகி ஒருராசனைப் பிறக்கும்படி கடாட்சிக்க அப்படியே சோழவம்சத்திற் பிறந்ததோச் செங்கட் சோழநாயனென்பவ ரனேகந் திருப்பணிகள் செய்து அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரானார் காஞ்சிபுரத்தில் தம்மைக் கல்லாலெறிந்த சாக்கிய நாயனாருக்குச் சிவலிங்கத்தினிடமாய்த் தரிசனமாகி மோக்ஷங் கொடுத்தருளினார். திருவிடைமருதூரில் வரகுண பாண்டியருக்குச் சிவலிங்கத்தினிடமாய்த்தரிசனையாகி அனுக்கிரகஞ் செய்தருளினார் திருவிரிஞ்சை புரத்தில் ஒரு சிறியபிராமணப்பிள்ளை தம்மை பூசிக்கும்படி திருமுடி சாய்த்தருளினார் திருவாலவா யென்னும் மதுரையில் அனேகருக்குத் தரிசனையாகி அனுக்கிரகஞ் செய்திருக்கிறார். இப்படி பூமியிலுள்ள புண்ணிய ஸ்தலங்களில் அன்பர்களை ரட்சிக்கும்படி

அவர் காண்பித்திருக்கிற மகிமையையெல்லாஞ் சொல்ல வேண்டுமானால் அளவுபடாது.

௩-வது.

வினா. இவைகளெல்லாம் விபரமாக எதினாலறியலாம்?

விடை. சிவபுராணங்களாலறியலாம்.

௪-வது.

வினா. பரமசிவன் அடியார்களுடைய பாவங்களை நீக்கி ரட்சிக்கும்பொருட்டு மனிதவுருவமாகி ஏதாவது மகத்துவம் விளங்கச்செய்தாரா

விடை. அநேகஞ் செய்திருக்கிறார் அவற்றிபாது தோத்திரஞ்சுருக்கிச்சொல்லுகிறோம்.

௫-வது.

வினா. அதென்ன?

விடை மதுரையில் அவர் மனிதவுருவுமான எல்லாம வல்லசித்தரென்னும் பெயருடையவராய் வந்தருளிக் கிழவர்கள் குமரர்களாகச் செய்ததும மலடிகள் பிள்ளைபெறச்செய்ததும் கூன் குருடு செவிடு ஊமை நீக்கியதும் நொண்டிகளுக்குக் கால்கூடச் செய்ததும கல்லானை

கரும்புதின்னச் செய்ததும்இன்னும் அனேக மகத்துவங்கள் விளங்கச்செய்தருளினார்.

௬-வது.

வினா. இன்னும் என்ன மகத்துவம் விளங்கச் செய்தார்?

விடை. திருவண்ணாமலையில் சந்ததியில்லாமல் நெடுநாளாக மனவருத்தப்பட்டுத் தமக்கு அன்போடு பணிசெய்திருந்த வல்லாளமகாராஜனுக்குக் குழந்தையாகிப் பிள்ளை கலிதீர்த்தருளினார்.

திரிசிரபுரத்தில் அம்மார்க்கமாகப் போன வைசியருக்கு வழித்துணையாய்ச்சென்று காப்பாற்றி மார்க்கசகாயரென்னுந் திருநாமம் பெற்றருளினார் முந்திய நீலகண்ட நாயனாரிடத்துக்கு மனிதவுருவமாயிருக்கின்ற அவரும் அவருடைய பத்தினியாரும் கிழத்தனமன்றி இளமை யடையும்படி கிருபை செய்தருளினார்.

சிறுத்தொண்ட நாயனாரிடத்தில் வயிரவசங்கம சொரூபராயெழுந்தருளி அவருடைய பிள்ளையைக் கறிசமைத்திடச்சொல்லி மறுபடியும் அந்தப்பிள்ளையைப் பிழைக்கும்படிசெய்து அவர்களுக்குமோக்ஷமருளினர்.

எ-வது.

வினா. இப்படிக்கொத்த பெருங்கருணையுள்ள ஒன்றாகிய கடவுளை வேதாகமவிதிப்படி அன்புடன்தொழுது துதித்துப் பேறுபெற்ற அடியார்களுண்டா?

விடை. அனேகரிருக்கின்றார்கள்?

அ-வது.

வினா. அவர்கள்யார்?

விடை. அறுபத்துமூன்றுநாயன்மார்களும் மாணிக்கவாசகசுவாமி முதலானவர்களுமாம்.

௯-வது.

வினா. அறுபத்துமூன்று நாயன்மாரவர்களாரென்னில் தில்லைவாழ்ந்தணர், திருநீலகண்டநாயனார், இயற்பகைநாயனார், இளையான்குடிமாற நாயனார், மெய்ப்பொருள்நாயனார், விறன்மிண்டநாயனார், அமர்நிதிநாயனார், எறிபத்தநாயனார், ஏனாதிநாயனார், கண்ணப்பநாயனார், குங்கிலியக்கலயநாயனார், மானக்கஞ்சாறநாயனார், அரிவாட்டநாயனார், ஆனாயநாயனார், மூர்த்தி நாயனார், முருகநாயனார், உருத்திரபசுபதிநாயனார், திருநாளைப்போவார்

நாயனர், திருக்குறிப்புத் தொண்டநாயனா சண்டேசநாயனர் திருநாவுக்கரசுசுவாமிகள், குலச்சிறை நாயனர் பெருமிழலை குறும்பநா யனர் காரைக்காலம்மையார் அப்பூதிநாய னர் நீலநக்க நாயனர், நமிநந்திநாயனர் திரு ஞானசம்பந்த சுவாமிகள் ஏயர்கோன்கலிக் காமநாயனர் திருமூலநாயனர் தண்டியடி-கள்நாயனர் மூர்க்கநாயனர், சோமாசிமாற நாயனர் சாக்கியநாயனர், சிறப்புலிநாயனர் சிறுத்தொண்ட நாயனர் கழற்றறிவார்நாய னர் கணநாதநாயனர் கூற்றுவநாயனர்புகழ் ச்சோழநாயனர் நரசிங்கமுனையரைய நாயன ர் அதிபத்தநாயனர் கலிகம்பநாயனர் கலி யநாயனர் சத்திநாயனர் ஐயடிகள் காடவர் கோன் நாயனர் கணம்புல்லநாயனர் காரிய நாயனர், முனையடுவார்நாயனர் கூற்சிங்கநா யனர் இடங்கழிநாயனர் செருத்துணை நாய னர் புகழ்த்துணைநாயனர் கோட்புலிநாயன ர் பூசலாநாயனர் மானியாரம்மை கோச்செங் கட்சோழநாயனர் நீலகண்ட யாழ்ப்பாண நாயனர், சடைநாயனர், இசைஞானியார்நா

யரூர் சுந்திரமூர்த்தி சுவாமிகள் முதலிய இ
வர்களே அறுபத்துமூன் றுநாயன்மார்களா
ய் பொய்யடிமையில்லாதார்பத்தராய்ப் பணி
வார்கள் பரமனையேபாடுவார் சித்தத்தை சி
வன்பாலேவைத்தார் திருவாரூர்ப் பிறந்தார்,
முப்பொழுதுந் திருமேனிதீண்டுவார் முழு
நீறு பூசியமுனிவர் அப்பாலுமடிச்சார்ந்தார்
என்னுமிவர்களுநாமநன்று கூறப்பட்ட இ
வர்கள் தனித்தனி யொவ்வொருவரில்லை
வர்களென்னும இம்மூவர் யாவரில
சுவாமியுமொருவர்

ய-வது.

வினா. அவர்களுக்குள்யாராவது மகத்துவங்களை வி
ளங்கச்செய்திருக்கின்றார்களா?

விடை. திருஞானசம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசு
சுவாமிகள் சுந்திரமூர்த்தி சுவாமிகள் ஆகிய
இம்மூவர்களும் அனேகமகத்துவங்களை விள
ங்கச்செய்திருக்கின்றார்கள்.

கக-வது.

வினா. மேற்சொல்லிய மூவர்களால் விளங்கப்பட்ட
மகத்துவங்கள் என்ன?

விடை.! திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பாச்சிலாச்சிராமமென்னும் ஸ்தலத்துக் கெழுந்தருளினபோது ஒருராசகுமாரத்திக்குக் கண்டிருந்தகுமரகண்டவலியாகிய வியாதியைத் தேவாரமோதித் தீர்த்தருளினார் திருமருகலென்னுந் தலத்தில் பாமபுகடித்து இறந்துபோன ஒருசெட்டிபிள்ளை பிழைக்கும்படி தேவாரம ஓத அவன் விஷம்நீங்கிப் பிழைத்தான்.

கொங்குதேசத்திற் குந் திருக்கொடிமாடச் செங்குன்றாரென்னுந் தலத்துக்கெழுந்தருளி அர்த்தநாரீசுவரரைத்தரிசித்து அவ்விடத்தில் சிலநாள் வசித்திருக்கையில் அந்தத்தேசத்தில் வருஷந்தோறுங் காணுகிற நளிர்சுரம் திருக்கூட்டத்தாரையுந் தொடாவே சுவாமியைத்தொழுது பதிகமோதித்தீர்த்தருளினார் இதுவுமன்றி அத்தேசத்திலிருப்பவர்களையும்அவ்வியாதி எப்போதுந் தொடாமலிருக்கும்படி யருளிச்செய்தார். அந்தத் தலத்துக்கிப்போது திருச்செங்கோடென்று பெயர்வழங்குகின்றது மதுரைக்கெழுந்தருளினபோது பாண்டியராசாவுக்குக் கண்டிருந்த சுரநோய் விபூதியினாலே தீரும்படி திருநீற்றுப்ப

திகம் பாடியருளினார் அந்தராசாவுக் கிருந்த கூன் நி மிரவும் அருளச்செய்தார்.

திருக்கொள்ளம்பூதூரென்னும் தலத்துக்கு அருகிலிருக்கிற ஆற்றிலே படகுதானே செல்லும்படி பதிகமோதியருளினார் திருவொத்தூரென்னுந் தலத்தில் ஆண்பனை பெண்பனையாய்க் காய்க்கும்படி பதிகமருளிச்செய்தார் திருமயிலையென்னுந் தலத்தில் எலும்பு பெண்ணாகப்பதிகமருளிச்செய்தார்.

கஉ-வது.

வினா. திருநாவுக்கரசுசுவாமிகள் என்ன மகத்துவம் விளங்கச்செய்தருளினார்?

விடை. திருநாவுக்கரசுசுவாமிகள் சமண சமயத்தார் சுண்ணாம்புகாளவாயிலிடச் சுவாமியைத் தியானித்துத் தேவாரமோதிப் பிழைத்திருந்தார் பாலில் விஷத்தைக் கலந்து கொடுத்தார்கள் அதையுண்டு பரமசிவனுடைய திருவருளினாற் பழுதுபடாதிருந்தார் மிதிக்கும்படி யானையைச் செலுத்தினார்கள். அதுசமணர்களையேகொன்றது கற்றூணிற்கட்டிக்கடலிற்போட்டார்கள் பஞ்சாக்ஷரப்பதிகமோ

றிச் சாம்பவமூர்த்தி கிருபையினால் அக்கல்லே தெப்பமாகமிதந்துவரத் திருப்பாதிரிப்புலியூருக்குச்சமீபத்தில் இருக்கிற கெடிலநதி முகத்துவாரத்தில் கரையேறினார் இந்தக் காரணத்தினால் அந்தத்தலத்தில் சுவாமிக்குக் கரையேறவிட்டவரென்று பெயர் பாம்புகடித் திறந்துபோனதிங்களூர் அப்பூதிநாயனாருடைய மூத்தபிள்ளை பிழைக்கும்படி தேவாரம் பாடியருளினார்.

௧௩-வது.

வினா. சுந்தரமூர்த்திசுவாமிகள் என்னமகத்துவம் விளங்கச்செய்தார்?

விடை. திருப்புகலூரில் பதிகமோதிச் செங்கல் பொன்னாகப்பெற்றுக்கொண்டார்.

விருத்தாசலத்தில் சுவாமி தமக்குக் கொடுத்த பொருளையெல்லாம் மணிமுத்தாநதியிற் போட்டுத்திருவாரூர்க் கமலாலயதீர்த்தத்தில் எடுத்தருளினார். திருவையாறென்னுந் தலத்துக்குச் சேரமான்பெருமானுடன்போனபோது காவேரிவெள்ளம் புரண்டுவரக்க

ண்டு பதிகம் பாடியருளிக் குறுக்கேயணைபோட்ட
துபோல வெள்ளம் நிற்கச்செய்தார் புக்கொளியூரவி
னாசியில் தாமெழுந்தருளுவதற்குச் சிலவருஷத்துக்
கு முன் முதலையுண்ட பிராமணப் பிள்ளையைச் சென்
றவருஷத்துக்குத்தக்க வளர்ச்சியுடன் முதலை யுமி
ழும்படி பதிகமோதியருளினர்.

கசா-வது.

வினா. மாணிக்கவாசகசுவாமிகள் என்னமகத்துவம்
விளங்கச்செய்தருளினர்?

விடை. அரிமர்த்தனபாண்டியராசனிடத்தில் மந்திரி
த்தலைவராயிருந்து அந்தராசனுடைய வித்த
த்தினாலே குதிரைகொள்ளப்போகும்போது
கயிலாயபதி திருப்பெருந்துறையில் குருமூ
ர்த்தமா யெழுந்தருளியிருந்து ஞானோபதேச
ஞ்செய்தருளப்பெற்றுத் தம்பொருட்டு மது
ரையில் சொக்கநாதசுவாமி நரியைக்குதிரை
யாக்கிப் பாண்டியராசனிடத்திற்குக்கொண்
டுவரவும் பின்பு வைகைநதி வெள்ளம் பரவிவ
ரச் செய்யவும் அந்நதிக்கரையை யடைக்கு
ம்படி மண்சுமக்கவுமான மகத்துவங் கள்

பித்தருளினர். மேலும் சிதம்பரத்தில்வாது செய்தபுத்தர்களை வென்று அந்தச் சமயத்துக்குட்பட்டிருந்த ராசனுடைய குமாரத்தியாகிய ஊமைப்பெண்பேசும்படி மகத்துவம் விளங்கச்செய்த திருஞானசம்பந்தசுவாமிகள் அப்பர்சுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிகள் மாணிக்கவாசகசுவாமிகள் ஆகிய இந்நால்வருக்கும் சமயாசாரிகளென்றும் திருநெறித் தலைவர்களென்றும் பெயர் இவர்கள்பாடியருளிய தேவாரங்களுக்கும் திருவாசகத்துக்குந் திருநெறித்தமிழ்வேதமென்றும் திருமுறையென்றும் பெயர் மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்தது திருவாசகம் மற்ற மூவர் முதலிய அருளிச்செய்தது தேவாரம் சிதம்பரத்தில் நடேசமூர்த்தி யொருபிராமணன்போலத் திருமேனி கொண்டுவந்து மாணிக்கவாசகசுவாமிகள் முன்னோதிய திருவாசகத்தையும் நூதலமாகத் திருக்கோவையாருஞ் சொல்லும்படி கட்டளையிட்டுத் தமது திருக்கரத்தினலெழுதினர்.

திருச்சிற்றம்பலம்.

இரண்டாம்பிரிவு-முற்றிற்று.



# மூன்றாப் பிரிவு.



பராசக்திசரித்திரம்.

## முதலாவது.

வினா. பராசக்தியாகிய பார்வதியாளைத் ஜெபமுந் தோத்திரஞ் செய்து பேறுபெற்ற அடியார்கள் யார்?

விடை. மதுரைமீனாட்சியம்மை சந்நிதியில் ஒரு, வித்தியாதரஸ்திரீயானவள் அன்புடன்யாழ்வாசித்துத் தோத்திரஞ்செய்து மீனாட்சியம்மையேதடாதகையென்னும்பெயரோடு தனக்குப்புத்திரியாய்வரும்படி பேறுபெற்றனள்.

## உ-வது.

வினா. மீனாட்சியம்மை யெப்படி புத்திரியாயவதரித்தாள்?

விடை. அந்தவித்தியாதரஸ்திரீயானவள் ராஜஸ்திரீயாகப் பிறந்து காஞ்சனமாலை யென்னும்

பெயர் கொண்டு மலயத்துவச பாண்டியன் மனைவியாய் வாழ்ந்துக்கொண் டிருக்கையில் புத்திரன் இல்லையென்பதைக் குறித்து அந் தபாண்டிய ராசன் யாகஞ்செய்ய அக்னிட த்தி லிருந்து மூன்றுவயசு பெண்குழந்தை யாக மீனாட்சியம்மை திருவவதாரஞ் செய் தருளினான்.

௩-வது.

வினா. இன்னம் யாராவது இப்படிதொழுது பேறு பெற்றார்களா?

விடை. கவுரியென்னும் ஒருபிராமணப்பெண் தன்த கப்பன் தனக்குபதேசஞ்செய்த சவுரிமந்தி ரத்தை யிடைவிடாம லன்புடன் சொல்லிப் பார்வதியாருடன் ரிஷபவாகனரூடரா யெ ழுந்தருளத் தரிசித்து கயிலாசத்துக்கு அவ ர்களுடன் போகும்படியான பேறுபெற் றாள்.

ஏவிராசபாண்டியரென்பவர் அன்புடன் தொழு து ஸ்தோத்திரஞ்செய்து சவுந்தரியலகரிபாடிப் பே றுபெற்றார். அவ்வலகரியை யிப்போது பத்திசிரத் தையுடனோதுகின்றவர்களும் இஷ்ட காமியார்த்தங்

கனை யடைகிறார்கள் அபிராமிபட்டரென்பவர் அன்புடன் தொண்டுசெய்து அபிராமிவந்தாதிபாடிப் பார்வதியாருடைய கிருபையினாலே அமாவாசை யிராத்திரியில் சந்திரோதய மாகும்படிசெய்து பேறுபெற்றார் இப்படியாக அனேகம்பேர் தொழுது தோத்திரஞ்செய்து பேறுபெற்றார்கள்.

ச-வது.

வினா. இப்படியாக அடியார்களுக்குக் கிருபைசெய்யும் பரமசிவனுக்கும் பார்வதியாருக்கும் புத்திரர்கள் இருக்கிறார்களா?

விடை. விநாயகமூர்த்தியென்றும் சுப்பிரமணிய சுவாமியென்றும் இரண்டு புத்திரர்களிருக்கிறார்களுமல்லாமல் வீரபத்திரசுவாமியும் புத்திரர்களென்று சொல்லப் பட்டாலும் சிவசொரூபமேயன்றி அன்னியமன்று.

ரு-வது.

வினா. விநாயகமூர்த்தியாகவந்தகாரணமென்ன?

விடை. கயமுகாசூரனென்னும் அசுரனைச்சங்கரிக்கும் பொருட்டுத்திருவவதாரமானார்

௬-வது.

வினா. விநாயகர் யானை முகத்துடன் திருவவதாரஞ், செய்தகாரணமென்ன?

விடை. கயமுகாசூரன் தேவர்களாலும், பூதங்களாலும் மனிதர்களாலும், மிருகங்களினாலும், இறவாவரம் பெற்றிருந்ததால் பலவுருவமுங் கலந்ததிருமேனிகொண் டவதரித்தருளினார்.

௭ வது.

வினா. கயமுகாசூரன்வரலாறென்ன?

விடை. மாகதனென்னும் ஒருமுனிவனுக்கு விபுதையென்னும் ராக்ஷசஸ்திரீவயிற்றில் யானைமுகத்துடன் புத்திரனாய்ப்பிறந்து பரமசிவனை நோக்கித் தவஞ்செய்து தேவர்கள் எல்லோரும் தன்னைச்சேவிக்கவும் தான் தேவர்முதலானோர்களாலும் எவ்வித ஆயுதங்களினாலும் இறவாமலிருக்கவும் வரம்பெற்றுக் கொண்டிருந்தான்.

௮-வது.

வினா. விநாயகர் எவ்வாறு திருவவதாரமாயினர்?

விடை. தேவர்கள் கயமுகாசூரனால் வருத்தப்பட்டு பரமேஸ்வரர் இடத்துக்குப்போய் முறை

யிட்டார்கள் அவர்களை இரட்சிக்கவேண்டு மென்கிற இரக்கத்தினாலே பரமேஸ்வரர்பார்வதியாருடன் கயிலாச கிரிச்சாரலில் ஒரு சோலையின் மத்தியில் இருக்கும் சித்திர மண்டபத்திற்கு எழுந்தருளினார்.

௯-வது.

வினா. அதன்பின்பு நடந்ததென்ன?

விடை. அதில் எழுதியிருந்த சித்திரங்களில் ஒருசித்திரமா யிருந்த சிவசத்தி பிரணவங்கள் பரமேஸ்வரருடைய அநுக்கிரகத்தினால் ஆண்யானைவடிவும் பெண்யானைவடிவுமாய்ச்சேர அதனிடமாக யானைமுகத்துடன் திருவவதாரமானார்.

௰-வது.

வினா. கயமுகாசூரனை யெவ்வாறுவதைத்தார்?

விடை. விநாயகமூர்த்தியானவர் பிரணவசொரூபமாய்த் திருவவதாரஞ் செய்து கணங்களுக்குத் தலைவராய்க் கணபதியென்னும் பெயருடன் கயிலாயத்தில் வீற்றிருக்கையில் கயமுகாசூரனால் வருந்திய தேவர்கள்யாவரும்போய்ப் பணிந்து முறையிட்டார்கள்.

கக-வது.

வினா. அதன்பின்பு நடந்ததென்ன?

விடை. விநாயகமூர்த்தி திருவுளமிரங்கிக் கணங்கள் சூழ்ந்து வரும்படிசென்று கயமுகாசூரனு டன் போர்செய்து அவன் எவ்வகைப்பட்ட ஆயுதங்களாலும் இறவாமலிருக்கும்படிபெ ற்றுக்கொண்ட வரத்தை யுணர்ந்து தமது திருமுகத்தில் வலப்புரத்திலிருக்கும் ஒரு கொம்பையொடித்து எறிந்துவதைத்தார்.

கஉ-வது.

வினா. அதன்பின்பு எப்படியானான்?

விடை, அவன் ஆரவாரம் பெற்றவனானதால் அந்த சரீரமாறிப் பெருச்சாளி வடிவங்கொண்டு பொர்செய்யவந்தான் அதைக்கண்ட விநாய கர் அதன்மேல் ஆரோகணித்துக் கொண் டார் இந்தகாரணத்தினால் அவருக்கு மூஷி கவாகன னென்றும் ஒருகொம்பொடித்த படியால் ஒற்றைக்கொம்பனென்றும். பெய ராயது.

கங-வது.

வினா. அவர்க்கு ஆயுதங்களென்ன?

விடை. அங்குசபாசங்களாம் இவ்விரண்டில் அங்குசம் வலக்கரத்திலும் பாசம் இடைக்கரத்திலும் இருக்கும்.

கச-வது.

வினா. மற்றொரு வலக்கரத்தில் என்னவைத்திருக்கிறார்?

விடை. தமது கொம்பிலொடித்த குறையை வைத்திருக்கிறார்.

கரு-வது.

வினா. மற்றொரு இடக்கரத்தில், என்னவைத்திருக்கிறார்?

விடை. மோதகம்வைத்திருக்கிறார்.

கசா-வது.

வினா. விநாயகரைத் தரிசிக்கிறவர்கள் தலையிற்குட்டிக்கொண்டுதோப்பணம் போடும்படியான காரணமென்ன?

விடை. கயமுகாசுரன் அதிகாரஞ் செலுத்திக் கொண்டிருக்கும்போது தேவர்கள் அவனிடத்

றக்கு வருகையில் அப்படி செய்துகொண்டிருந்தார்கள் அவனை விநாயகர் வதைத்தபின்பு தேவர்கள் விநாயகரைப்பணிந்து குட்டிக்கொண்டு தோப்பணம்போட்டு இனி யிப்படியே அடியேங்கள் வந்தனையை யேற்றுக்கொள்ள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

௧எ-வது.

வினா. இன்னம் யாராவது இப்படி தொழுது வரம்பெற்றார்களா?

விடை. இராவணனும் அகஸ்தியமுனிவரும் அவ்வாறுதொழுதார்கள்.

௧அ-வது.

வினா. இராவணன்தொழுததற்குக்காரணமென்ன?

விடை. இராவணன் ஸ்ரீகயிலாயகிரியில் தவஞ்செய்து இலங்கைப் பட்டணம் அழியாம லிருக்கும் பொருட்டுப் பரமேஸ்வரர் ஒரு சிவலிங்கம் கொடுத்தருளப் பெற்றுக்கொண்டு வருவதைத் தேவர்களறிந்து அதைத் தடுக்கவேண்டு மென்று விக்கினேஸ்வரரைத் துதித்தார்கள்.

கசுக-வது.

வினா. அவரென்னசெய்தார்?

விடை. இராவணனுக்குநீர் அதிகரிக்கும்படி வருண னையேவித் தாம் ஒரு சிறு பிராமணப்பிள் ளைபோல் இராவணன் எதிரிற்போனார்.

உ0-வது.

வினா. அதற்குமேல் நடந்ததென்ன?

விடை. இராவணன் பிராமணப்பிள்ளையாய் வந்தவ வரைக் கண்டமாத்திரத்திலே அவற்குபசா ரஞ் சொல்லி நான் சகலஸ்பரிசத்துக்குப் போய் வருகிறவரைக்கும் இந்தச் சிவாலிங் கத்தைப் பூமியில்வைக்காமல் கையிலேதா னேவைத்துக் கொண்டிருமென்று சொன் னான்.

உக-வது.

வினா. அந்தப்பிராமணபிள்ளை யென்னசொன்னார்?

விடை. நான் சிறுப்பிள்ளையானபடியினாலே இந்தச் சிவலிங்கத்தை நெடுநேரந் தாங்கிக்கொண் டிருக்கும் வல்லமை யில்லாதவனாயிருக்கி

றேன் ஆதலால் மூன்றுதரம் அழைப்பேன் அதற்குள் வராவிட்டால் சிவலிங்கத்தைக் கீழேவைத்து விடுவேனென்று சொன்னார்.

உஉ-வது.

வினா. அதற்குமேல் நடந்ததென்ன?

விடை. இராவணன் சம்மதித்துச் சிவலிங்கத்தை அந்தப் பிராமணப்பிள்ளையினிடம் கொடுத்து ஜலஸ்பரிசத்துக்குப் போயுட்கார்ந்தான்.

உங-வது.

வினா. அதன்பின்பு விநாயகரென்னசெய்தார்?

விடை. போயுட்கார்ந்தவுடனே மூன்றுதரம் அழைத்து அவன் வராமையினாலே சிவலிங்கத்தைத்தரையிலேவைத்துவிட்டார்.

உச-வது.

வினா. இராவணன் யென்னசெய்தான்?

விடை, ஜலஸ்பரிசஞ் செய்துவந்து சிவலிங்கத்தைத் தரையில் வைக்கப்பட்டிருப்பதைநோக்கி விசனமுற்றவனாய்த் தன்னுடைய இருபது கைகளையுங் கொண்டு தூக்கினான் அந்தச்

சிவலிங்கந் தூக்கப்படாமல் பசுவின் காது போலக் குழைந்துவிட்டது.

௨௫-வது.

வினா. இப்போது அந்தச் சிவலிங்கத்துக்கு பேரென்ன?

விடை. இராவணனால் தூக்கப்படாமல் மகாபலமுள்ளதா யிருந்தபடியினாலே அந்த சிவலிங்கத்துக்கு மகாபலலிங்கமென்னு பெயர், அந்தச் சிவலிங்கம் பசுவின் காதுபோலக் குழைந்தபடியினாலேஅந்தஸ்தலத்துக்குக்கோகர்ன்னமென்றுபெயர், கோ-பசு, கர்ன்னம் காது.

௨௬-வது.

வினா. பின்பு இராவணன் சும்மாபோய்விட்டானா?

விடை. அவனதிக கோபங்கொண்டு பிராமணப்பிள்ளைவடிவமாய் நிற்கிற விநாயகமூர்த்தி சிரசில் குட்டினான்.

௨௭-வது,

வினா. அவரென்னசெய்தார்?

விடை. இராவணன் குட்டவே மிகுந்தகோபத்துடன் தம்முடைய சொரூபங்கொண்டு துதிக

கையினாலே இராவணனைத் தூக்கி யெறிந்து பந்தாடினார்.

௨௮-வது.

வினா. அவன்பிழைத்தானோ இறந்தானோ?

விடை. அவன் அதிக பராக்கிரம சாலியானதாலும் ஈஸ்வர வரம் பெற்றிருப்பவனாகலாலும்இற வாதவனாய் மிகுந்தவருத்தப்பட்டு என்னைய னே தெரியாமையால் அடியேன் செய்த பி ழைபொறுத்து இரட்சிக்க வேண்டுமென்று தோத்திரஞ்செய்தான்.

௨௯-வது.

வினா. அதன்பின்பு நடந்ததென்ன?

விடை. இராவணன் அப்படி தோத்திரஞ் செய்ததி னாலே விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து அவ னைத் தரையில்விட்டு நீநம்மை குட்டினபடியி னாலே உன் னிருபது கைகளாலும் குட்டிக் கொள்ளென்று சொல்ல அப்படியே குட்டிக்கொண்டு விநாயகனைத்தோத்திரஞ் செய்து விடை பெற்றுக்கொண்டு இலங்கைக்குப் போய்ச் சேர்ந்தான்.

கடு-வது.

வினா. அகஸ்தியமுனிவர் தொழுததற்குக் காரண மென்ன?

விடை. தேவேந்திரன் சூரனுக்குப் பயந்து சுவர்க்க லோகத்தைவிட்டுச் சீர்காழியில்வந்து பரம சிவனைப் பூசிப்பதற்காக ஒரு நந்தவனம்வை த்து அதுமழையில்லாமல் உலர்ந்துபோக வேமனம் வருத்தமுற்றான்.

கசு-வது.

வினா. பின்பு நந்தவனம் எவ்வாறாயிற்று?

விடை. தேவேந்திரன் மனம் வருத்தமுற் றிருக்கை யில் நதிப்புனல்வந்து பாயுமாதலால் நந்தவன ம் தழைத்து பூசைக்கு வேண்டிய மலர்களை த் தருமென்று சிவன் கிருபையினாலே அச ரீரிவாக்குண்டாகியது.

கஎ-வது.

வினா. நதிப்புனல் எவ்வண்ணம் வந்துபாய்ந்தது?

விடை. தேவேந்திரன் சிவகாருண்ணியத்தினால் உ ண்டான அசரீரிவாக்கைக் கேட்டுச் சந்தோ

ஷமுற் றிருக்கையில் நாரதமுனிவர் வந்து நதிவருவதற்குபாயஞ் சொன்னார்.

௩௩-வது.

வினா- என்ன உபாயஞ்சொன்னார்?

விடை. தேவேந்திரமகாராஜனே கைலாயகிரியில் அகஸ்தியமுனிவர் வந்திருக்கிறார் அவர் கமண்டலத்தில் காவேரிநதியிருக்கின்றது நீ விநாயக மூர்த்தியைப் பிரார்த்தித்தால் அந்த நதிவந்து பாயுமென்று சொன்னார்.

௩௪-வது.

வினா. அதன்பின்பு நடந்ததென்ன?

விடை. நாரதமுனிவர்சொன்னபடி தேவேந்திரன்விநாயக மூர்த்தியைப் பிரார்த்தித்தார்.

௩௫-வது.

வினா. விநாயகர் எவ்வாறு அருளிச்செய்தார்?

விடை. விநாயகர் காக்கை வடிவங்கொண்டு அகஸ்தியர் கமண்டலத்தின்மேல் உட்கார்ந்து விழுத்துவிட்டார் அந்த நதிப்புனல் தேவேந்திரன் நந்தவனத்தில்வந்து பாய்ந்தது.க.

௩௬-வது.

வினா. அதற்குமேல் அகஸ்தியர் என்னசெய்தார்?

விடை. காக்கை வடிவங்கொண்டு கமண்டலத்தைக் கவிழ்த்துவிட்ட விநாயகர் ஒரு பிராமணப் பிள்ளை வடிவங்கொண்டு தமக்குஎதிரில் வருகையில் தம்முடைகையினால் அந்தப்பிராமணப்பிள்ளை தலையிற் குட்டப்போனார்.

௩௭-வது.

வினா. பின்பு நடந்ததென்ன?

விடை. அம்முனிவர்க் கெட்டாமல் வளைய வளைய வோடி இளைக்கச்செய்து பின்புதம்முடைய சொரூபத்துடனே நின்றார் அதைக் கண்ட அகஸ்தியமுனிவர் பயந்து சாஷ்டாங்கமாகச்சேவித்து விநாயகரைத் தோத்திரஞ் செய்து அவர் கட்டளையின்படி குட்டிக்கொண்டு வேண்டிய வரங்களையும் பெற்றுப் பொதிகமலைக்குப் போய்விட்டார் நந்தனவனம் தழைத்துப் பூசைக்கு வேண்டிய மலர்களைத் தரத்தேவேந்திரன் பரமசிவனைப் பூசித்துத் தன்னுடைய செல்வத்தைப் பெற்றுக் கொண்டான்.

௧அ-வது.

வினா. பரமசிவனுக்குப் பார்வதியென்கிற சக்தியிருப்பதுபோல விநாயகருக்குச் சக்தியுண்டா?

விடை. சித்திபுத்தியென்கிற சக்திகளோடுகூடி. சித்திபுத்திவிநாயகரென்றும் வல்லபையென்கிற சக்தியோடுகூட வல்லபை கணபதியென்றுமிருக்கிறார்.

இந்த விபரம் புராணங்களால் விளங்கும்.

௧௯-வது.

வினா. எந்தத்தினம் விரத மிருக்கவேண்டியது?

விடை. சதுர்த்தி தியில் விரத மிருக்கவேண்டியது.

௨0-வது.

வினா. இந்த தினத்தில் விசேஷமா யனுஷ்டிப்பதுமுண்டா?

விடை. ஆவணிமாதத்தில்வரும் பூர்வபட்ச சதுர்த்திதியில் விசேஷமா யனுஷ்டிப்பதுண்டு இதுவுமன்றி அங்காரக சதுர்த்தி சங்கடசதுர்த்தி என விசேஷமாக அனுஷ்டிக்கிற காலங்களுமுண்டு.

சக-வது.

வினு. விநாயக மூர்த்தியைத் தொழுது பேறு பெற்ற அடியார்கள்யார்.

விடை. புருசுண்டமகாரிஷி முதலானரிஷிகள் விநாயகரைத் தொழுது பேறு பெற்றிருக்கிறூர்கள் இவர்களுமல்லாமல் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட சிவாசாரியார் ஔவையார் மற்றும் அநேகம்பேர் தொழுது பேறு பெற்றிருக்கிறூர்கள்.

சஉ-வது

வினு. எந்தக் காரியஞ்செய்யத் தொடங்கினுலும் விநாயகபூசைமுதலிற்செய்வதெதினுலே?

விடை. அவர்கள்செய்யுங் காரியங்களுக்கு விக்கினம்வராமல் காப்பாற்றுகிற கடவுளாகையால் விநாயகரை முதலில் பூசிக்கிறது இந்தக் காரணத்தினுல் அவருக்கு விக்கினேஸ்வரரென்று பெயருண்டாயிருக்கிறது.

சகூ-வது.

வினா. அவரை யெந்த விடத்திலும் ஸ்தாபித்துப் பூசிக்கலாமா?

விடை. பூசிக்கலாம் ஆனால் வன்னிவிருக்ஷத்தி னடியிலும் மந்தார விருக்ஷத்தி னடியிலும் ஸ்தாபித்துப் பூசிப்பது விசேஷமாம் சமியென்கிறவள் ஒருரிஷியினுடையபுத்திரிமந்தாரனென்பவன் ஒருரிஷியினுடைய புத்திரன் இவர்களிருவரும் தம்பதி சமேதராய் ஒருவனத்தில் செல்லுகையில் விநாயகர் சாரூபம் பெற்ற புருசுண்டமகாரிஷியைக்கண்டு நிந்தித்து அவருடைய சாபத்தினால் சமிவிருக்ஷமும் மந்தாரவிருட்சமுமாயினார்கள்.

சஅ-வது.

வினா. பின்பு அவர்களுக்கு அந்தச் சாபம் நீங்கவில்லையா?

விடை. அந்தமரவுருவம் நீங்கினதில்லை ஆனால் விநாயகரை அந்த மரங்களினிழலில் ஸ்தாபித்து விசேஷமாகப் பூசிக்கவும் அந்த மரத்து

புட்பங்கள் அவருடைய அர்ச்சனைக்கு யோக்கியமாகவும் வரப்பெறுவார்கள்.
சமியென்றாலும் வன்னியென்றாலும் ஒரே பொருள்தான்.

வினா. விநாயகரை வீடுகடோறும் வைத்துப் பூசிப்பதற்குக் காரணமென்னை?

விடை. அவருடைய பன்னிரண்டு திருவவதாரத்தில் ஒரு திருவவதாரமாய் காசிப் பட்டணத்தில் செய்திருந்தபோது எல்லாருடைய வீட்டிலும் ஏககாலத்தில் விருந்தமுது கொண்டருளினார். அதுமுதல் யாவரும் அவரவர்கள் வீடுகடோறும் வைத்துப் பூசிக்கும்படி அனுக்கிரகஞ் செய்தருளினார்.

விநாயக சரித்திரம்-முற்றிற்று.

# சுப்பிரமணியர் சரித்திரம்.



## ௮ - வது.

**வினா.** சுப்பிரமணியர் திருவவதாரமானதற்குக் காரணமென்ன?

**விடை.** சூரபத்மன் முதலாகிய அசுரரை வதைத்துத் தேவர்களை ரட்சிக்கும்பொருட்டு அவதாரஞ்செய்தார்.

## ௯ - வது.

**வினா** எவ்வாறு அலங்காரஞ்செய்தார்?

**விடை.** இந்திரன்முதலிய தேவர்கள் எல்லாருஞ் சூரபத்மனால் வருந்திக் கயிலாயத்திலே போய்ச் சுவாமி சந்நிதியில் முறையிடக் கயிலாசபதி கிருபை கூர்ந்து சுப்பிரமணியர் திருவவதாரமாகவேண்டுமென்று திருவுளமாகி ஆறுமுகங் கொண்டிருக்க ஆறு நெற்றிக் கண்களிலிருந்து ஆறுதீப்பொறி உண்டாகியது அந்தப்பொறிகளைச் சரவணப் பொய்கையில் கொண்டுபோய்விடும்படி அக்கினிதேவ

னுக்கும் வாயுதேவனுக்கும் கட்டளையிட அவர்கள் தாங்கிக்கொண்டுபோய்ச்சரவணப்பொய்கையில்விட்டார்கள்.

௪௯-வது.

வினா. பின்பு நடந்ததென்ன?

விடை. கயிலாசபதியினுடைய கிருபையினாலே ஆறுபொறிகளும் ஆறுகுழந்தைகளாகிக் கார்த்திகை நக்ஷத்திரங்களாகிய ஆறு மாதர்களின் முலைப்பாலுண்டு பார்வதியார்வந்து எடுக்கையில் ஆறு திருமுகமும் பன்னிருபுயமுள்ள ஒருதிருமேனிகொண்டு முருகன் கார்த்திகேயன் காங்கேயன் என்னுந் திருநாமம் பெற்றுவளர்ந்தனர்.

௫௰-வது

வினா. அந்தப்பெயர்வந்ததற்குக் காரணமென்ன?

விடை. இளமைமாறாதிருப்பதினால் முருகனென்றும் கார்த்திகை நட்சத்திரத்தின பாலுண்டு புத்திரனானதினால் கார்த்திகேயனென்றும் கங்கையில் வளர்ந்த புத்திரனானதினால் காங்கேயனென்றும்பேர் வந்தது.

௫௧-வது.

வினா. இந்தத் திருநாமங்கள் பெற்ற சுப்பிரமணி யக்கடவுள் அதன்பின்பு என்னசெய்தார்?

விடை. தம்முடையசகோதரர்களாகிய தொந்தொன்பதுவீரர்களோடு கூடிக்கொண்டு பலபல அற்புதமான திருவிளையாடல்செய்தார்.

௫௨-வது.

வினா. அந்த வீரர்களுண்டானதெப்படி?

விடை. கயிலாச பதியினுடையநெற்றிக் கண்களிலிருந்து தீப்பொறிகள் சிந்தினபோது பார்வதியார் பயந்து ஓடினார்அப்படி பயந்து வோடுகையில் பார்வதியின் திருவடிகளி லணிந்திருக்குஞ்சிலம்புகள் ஒன்றோடொன்றுதாக்க அவ் விரண்டி லிருந்தும் நவரத்தினங்கள் சிந்தின.

௫௩-வது.

வினா. அதன்பின்பு நடந்ததென்ன?

விடை. அந்தரத்தினங்களில் பார்வதியாருடைய திருவுருவந்தோற்றி அவ்வுருவம் ஒன்பது ஸ்

திரீகளாகி சுவாமியினுடைய திருவருளால் கருப்பமடைந்தார்கள்.

௫௪-வது.

வினா. அதன்பின்பு நடந்ததென்ன.

விடை. அதனைப் பார்வதியார்கண்டு கோபங்கொண்டு கருப்பம்உற்பத்தியாகாமல் இருக்கும்படி சபிக்கையில் அவ்வொன்பதுஸ்திரீகளும் பயந்தபோது சரீரத்தில் உண்டான வேர்வையில் லக்ஷம் வீரர்கள் உற்பத்தியாயினார்கள்.

௫௫-வது.

வினா. அவர்கள் வயற்றிலிருந்து கருப்பம் உற்பத்தியாகவில்லையா?

விடை. சிலகாலஞ் சென்றபின்பு பார்வதியின் அநுக்கிரகத்தினால் வீரவாகு முதலானநவவீரர்கள் உற்பத்தியானார்கள்.

௫௬-வது.

வினா. அவர்கள் பெயரென்ன?

விடை. வீரவாகு-வீரகேசரி-வீரமயேந்திரன்-வீரமகேசுரன்-வீரமாபுரத்தான் - வீராக்கதன் -

வீர மார்த்தாண்டன்-வீராந்தகன் வீர தீர ன்-என்பவைகளாம்.

ருஎ-வது.

வினா சுப்பிரமணியர் பின்பு என்னசெய்தார்?

விடை. கயிலாசபதியினுடைய கட்டளையின்படி மேற்சொல்லிய வீரர்களும் இரண்டாயிர வெள்ளம் பூதகணங்களும் கூடவரும்படி ரதாரூடராகப் பூலோகத்தில்வந்து கிரவுஞ்சகிரியையும் சூரனுடைய தம்பியான தாருகனையும்வதைத்தார்.

ருஅ-வது.

வினா. அதன்பின்புஎன்னசெய்தார்

விடை திருச்செந்தூரி லெழுந்தருளி யிருந்து சூரனுக்குப் புத்திசொல்லும்படி வீரவாகுதேவரைத் தூதாக அனுப்பி அவன் அகங்காரத்தை அறிந்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சேனைகளுடன் வீரமயேந்திர புரிக்குப்போய் யுத்தஞ்செய்து வீரவாகுதேவரால் சூரனுடைய மகனாகிய பானுகோபனைக் கொ

ஒழித்துச் சூரன் தம்பியாகிய சிங்கமுக னையுமசுரனையும் தமது வேலாயுதத்தால் வதைத்தருளினார்

௫௧-வது

வினா. பின்பு என்ன செய்தார்

விடை. திருச்செந்தூரினின்றும் எழுந்தருளி வீரவாகுமுதலாகிய தூதுவர்களோடும் மற்றவர்களோடுஞ் சூழ்ந்துவரும்படி சென்று திருப்பரங்குன்றமென்னும் ஸ்தலத்திற்போய்ச் சேர்ந்தார்.

வினா அங்கேநடந்ததென்ன

விடை. தேவேந்திரன் தன் புத்திரியாகிய தெய்வானையை விவாகஞ் செய்துகொள்ளும்படி விண்ணப்பஞ்செய்யக் கிருபைகூர்ந்து திருக்கலியாணமகோற்சவங்கொண்டருளினார்.

௫௨-வது.

வினா. அதன்பின்பு அந்தத்தலத்திலேதானேயிருந்தாரோ

விடை. அங்கிருந்தெழுந்தருளி ஸ்கந்தகிரியிற் போய்ச்சேர்ந்து தெய்வயானை சமேதராய் வீற்றிருந்தார்.

௬௨-வது.

வினா அவ்விடம் விட்டு எங்கும் எழுந்தருளவில்லையோ.

விடை. அங்கிருந்து வெள்ளியமலைக்கெழுந்தருளிக் குறவர்வீட்டில் வளர்ந்துகொண்டிருந்த வள்ளிநாய்ச்சியாரை விவாகம்செய்துகொண்டருளித் திருத்தணிகையில்எழுந்தருளி வீற்றிருந்து மறுபடியும் ஸ்கந்தகிரியில் எழுந்தருளி வீற்றிருந்தார்.

௬௩-வது.

வினா. சுப்பிரமணியசுவாமிக்குரியவிரதங்களெவை.

விடை. கார்த்திகைநட்சத்திரமும் சஷ்டிதிதியுமாம்.

௬௪-வது.

வினா. அவரைத்தொழுது பேறுபெற்றவர்கள்யார்

விடை. நாரதர்முதலாகிய முனிவர்களும் முசுகுந்தசக்கிரவர்த்திமுதலாகிய அரசர்களுமாம்

௬௫-வது

வினா? இந்தயுகத்திலே தொழுது பேறுபெற்றவர்கள்யார்.

விடை. நக்கீரதேவர் அருணகிரிநாதர் முதலாகிய சிலர் பேறுபெற்றார்கள்.

சரு-வது

வினா? அவர் அடியார்களுக்கு அருள் செய்யும்பொருட்டுத் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்தலங்களவை?

விடை. திருப்பரங்குன்றம் திருவாவினன்குடி - திருச்செந்தூர் திருவேரகம் - சோலைமலை குன்றுதோறாடல் - ஆகிய ஆறுதலங்களும் மற்றும் அனேக ஸ்தலங்களுமாம்

சுள-வது

வினா? வீரபத்திரசுவாமி திருவவதாரமானதற்கு காரணமென்ன.

விடை. கயிலையபதியாகிய பரமேஸ்வரனை மதியாமல் தக்கனென்பான் ஒருயாகம் செய்தான் அந்தயாகத்தை அழிக்கும்பொருட்டுப் பரமேஸ்வரன் திருவுளங் கொள்ள அவருடையநெற்றிக் கண்ணினிடமாகத் திருவவதாரமானார்.

௬௮-வது.

வினா? வீரபத்திரர் அந்தயாகத்தை எப்படி அழித்தார்.

விடை. பூதப்படைகளோடும்போய் அங்கிருந்ததேவர்களை யெல்லாம் அதப்படுத்தித் தக்கன் தலையை யறுத்து யாகத்தையழித்தார்.

௬௯-வது.

வினா? பின்பு அந்த தக்கன் பிழைக்கவில்லையோ.

விடை. பரமேஸ்வரன் கிருபையாலே பிழைத்தான் ஆனால் ஆட்டுத்தலை பெற்றுப் பிழைத்தான் இச்சரித்திரங்கள் புராணங்களால் விபரமாக விளங்கும்.

சிவதரிசனவிதி

௭0-வது.

வினா. சிவதரிசனஞ் செய்ய வேண்டிய முறைமை யெப்படி?

விடை. க-விநாயகமூர்த்தி-உ-மூலலிங்கம்-௩-சபாபதி மூர்த்தம்-௪-சோமாசகந்த மூர்த்தம்-௫-பரிவாரதேவர்கள்-௬-மூலஸ்தானம்அம்மை

௭-சண்டேசுவரர்-௮-பயிரவர் இந்தக் கிரமமாக தரிசிக்கவேணும் ஆனால் முதல்விநாயகமூர்த்தியைத் தரிசித்தவுடன் நந்திதேவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மூலலிங்க முதலாகத் தரிசிக்கவேண்டும்.

௭௧-வது.

வினா. சோமஸ்கந்த மூர்த்தமென்பதற்குப் பொருளென்ன?

விடை. உமையவளோடும் ஸ்கந்தரோடும் கூடியிருக்கிற மூர்த்தமென்பதாம் அந்த மூர்த்தநேயகரென்றுஞ் சொல்லப்படுகின்றது.

௭௨-வது.

வினா. பரிவாரதேவர் யார்?

விடை. இருபத்தஞ்சு முகூர்த்தங்களில் சபாபதியும் சோமசகந்தமூர்த்தவீறச் சந்திரசேகரர் முதலிய இருபத்துமூன்றுமூர்த்தமாம் - பிரமதேவன்விஷ்ணு-துர்க்கி-சாஸத்தா சுப்பிரமணியர்-வீரபத்திரர் நவக்கிரகங்கள் வாமாதிஅஷ்டசத்திகள் பரமேசுரர்களுமாம்.

றைமைப்படி சிரசுவைத்து நமஸ்காரஞ் செய்யவேண்டும்.

எஅ-வது.

வினா. மேற்குத்திசைநோக்கியசந்நிதியானாலோ

விடை. அந்தச் சந்நிதியிலும் பலிபீடத்தி னிருதிமூலையில் முன் சொன்னபடி சிரசுவைத்துப்பணியவேண்டும்

எசுஅ-வது.

வினா வடக்குதிசைநோக்கிய சந்நிதியானாலோ?

விடை. வடக்கு திசை நோக்கிய சந்நிதியானால் பலிபீடத்தின் வாயுமூலையில் சிரசு வைத்துக் காலைமேற்காகநீட்டி முன்சொன்னபடி பணியவேண்டும் ஆனால்பகல்பதினைந்து நாழிகைக்கு மேற்பட்டகாலத்தில் தரிசிக்கப்போனால் மேற்கே காலை நீட்டக் கூடாமையினாலே அஷ்டாங்கபஞ்சாங்கத்துடன் பணியாமல் நின்றபடி இரண்டு கைகளையுங் குவித்து உச்சியின்மேல் வைத்துக் கொண்டு தரிசிக்க வேண்டும்.

௪0-வது.

வினா. பகல் பதினைந்து நாழிகைக்குமேல் தரிசிக்கப் போவதற்குக் காரணமென்னை?

விடை. சூரியபகிரகணம்மகாசங்கராந்திமுதலாகிய புண்ணியகாலங்கள் பகல் பதினைந்து நாழிகைக்குமேல் வருமாகில் தரிசிக்கப் போகவேண்டும்.

௪௧-வது.

வினா. சூரிய அஸ்தமானத்தின்பின் தரிசிக்கப்போனால் அப்படியே பணியவேண்டுமோ?

விடை. பகல் பதினைந்துநாழிகைக்குமேல் சூரிய அஸ்தமனமாவதற்கு முன்வரையில் அஷ்டாங்கத்துடன் பணியலாகாதேயன்றி மற்றக் காலங்களிலெல்லாம் அஷ்டாங்கத்துடனே தான் பணியவேண்டும்.

௪௨-வது.

வினா. அஷ்டாங்க பஞ்சாங்கமென்பதை யல்லாமல் வேறுமுண்டோ?

விடை. ஏகாங்கம் துவிதாங்கம் திரிதாங்கம் பஞ்சாங்கம் அஷ்டாங்கம் என ஐந்துமாம்.

விடை. மூன்று அல்லது ஐந்து ஏழு பிரதக்ஷிணஞ் செய்யவேண்டுவது இந்தத்தொகைக்கு மேற் படவும் செய்யலாம்.

௬௦-வது.

வினா. எந்தக் காலங்களில் ஆலயத்துக்குப் போக வேண்டும்?

விடை. காலை உச்சி அந்தியென்னும் திரிசந்தி காலங் களிலும் போகலாம்.

௬௧-வது.

வினா. இந்த மூன்றுகாலமல்லாத காலத்தில் தரிசன ஞ்செய்ய ஆலயத்துக்குப் போகலாகாதோ?

விடை. கிரகணபுண்ணியகாலம் சங்கராந்தி புண்ணிய காலம் நேரிடுமானால் தரிசனஞ்செய்யப்போக லாம்.

௬௨-வது.

வினா. எந்த ஆவரணத்தில் பிரதட்சணஞ் செய்ய வேண்டுவது?

விடை. முதலாவரணந் தவிர மற்ற ஆவரணங்களில் பிரதட்சணஞ் செய்யலாம்.

௧௩-வது.

வினா. முதலாவரணம் நீங்கலாகச் சொன்னதென்ன?

விடை. முதலாவரணத்தில் ஆதிசைவப் பிராமணர்கள் பிரதக்ஷணஞ் செய்யலாமேதவிர மற்றவர்கள் யாரும்போகவும் கூடாதென்று ஆகமங்கள் சொல்லுகின்றன.

௧௪-வது.

வினா. ஆவரணங்களின் முறைமையெப்படி?

விடை. சிவலிங்கப் பெருமானைக் கெர்ப்பகிரகத்தில் சூழ்ந்து வரத்தக்கதாக இருப்பதே முதலாவரணம் அதற்கப்புறத்திருப்பது இரண்டாமாவரணம் அதற்கப்புறத்திலிருப்பது மூன்றாமாவரணம அதற்கப்பறத்திருப்பது நாலாமாவரணம் அதற்கப்புறத்திருப்பது ஐந்தாமாவரணம் அதற்கப்பால் ஊரின்புறமே ஆறாமாமாவரணம்.

௧௫-வது.

வினா. முதலாவரணத்திற் பிரதக்ஷணஞ் செய்யத்தக்க ஆதிசைவப் பிராமணர்கள் மற்ற ஆவரணங்களிற் பிரதக்ஷணஞ் செய்யலாகாதோ?

விடை. முதலாவரணத்திற் பிரதக்ஷணஞ் செய்வதினுல்வரும் பலனுக்குமேல் அதிகபலன் வருமென்று ஒன்றுக்கொன்றுயர்த்திச் சொல்லியிருப்பதினுல் ஆதிசைவரு மற்ற ஆவரணத்திற் பிரதக்ஷணஞ் செய்தால் விசேஷமான பலன் பெறுவார்கள் இப்படிவரும் ஆவரணங்களில் ஸ்தூபிநிழலாவது துசஸ்தம்ப நிழலாவது நேரிடுவதாயிருந்தால் அந்த ஆவரணத்தைவிட்டு அப்புறத்திலிருக்கும் ஆவரணத்தில் பிரதக்ஷணஞ் செய்யவேண்டும் சுவாமியின் பின்வரும்போது மேற்சொன்ன நிழலிருக்குமானுலும் குற்றமில்லை.

௯௧-வது.

வினு. பிரதக்ஷணம் இத்தனை நாழிகைச் செய்யவேண்டுமென்கிற நியதியுண்டோ?

விடை. ஒரு ஜாமப்பொழுதளவு செய்யவேண்டுமென்றும் அவ்வாறு செய்தால் ஜெனனமரணம் நீங்கிச் சிவலோகம் அடைவார்களென்றும் ஆகமத்தில் சொல்லுகின்றது.

௬எ-வது.

வினா இன்னம்பிரிவுண்டோ?

விடை. வேறுவகையுண்டு அதாவது பிரதக்ஷணஞ்செய்யத் தொடங்கும்போது நந்திதேவரைத் தரிசித்துக்கொண்டு அங்கிருந்தபடியே இடமாகச்சென்று சண்டேச நாயனாரைத் தரிசித்து சென்றவழியே திரும்பிவந்து மறுபடியும் நந்திதேவரைத் தரிசித்து அங்கிருந்து வலமாகச் சென்றுசண்டேசுரநாயனாரைத் தரிசித்துத்திரும்பிவந்து நந்திதேவரைத் தரிசித்துப் பின்பு சிவலிங்க தரிசனஞ்செய்து பணியவேண்டும் இதற்குச் சோமசூத்திரப் பிரதக்ஷணமென்று பெயர் இவ்வாறு ஒரு பிரதக்ஷணஞ்செய்தால் அனந்தம் பலனுண்டு பிரிந்துவருகின்றபடியே பிரதக்ஷணஞ் செய்யவேண்டும் இந்தப் பிரதக்ஷணம் பிரதோஷகாலத்திற் செய்தால் விசேஷமான பலனுண்டு.

௬அ-வது.

வினா. பிரதோஷகாலமாவது எது?

விடை. பகல் இருபத்தாறேகால் நாழிகைக்கு மேற்பட்ட மூன்றேமுக்கால் நாழிகைக் குட்பட்டதுமானகாலம் பிரதோஷகாலம் இந்தக்காலத்திற் சிவதரிசனஞ்செய்வது முக்கியமானதால் விபூதி ருத்திராக்ஷத்துக் குட்பட்ட சிவனடியார்களாயிருக்குஞ்சைவர்கள் அவசியஞ் சிவதரிசனஞ் செய்யவேண்டும்.

௧௧-வது.

வினா பிரதோஷமென்பதற்குப் பொருளென்ன?

விடை. இராத்திரியின்முன் என்பதாம் சமஸ்கிருதத்தில் ரசனிமுகமென்று சொல்லப்படுகின்றது இவ்வாறுசொல்லப்படுகின்ற பிரதோஷகாலம் திரயோதசி திதியில்சிறந்து பிரதோஷ விரதமும் இந்தத்திதியில் அனுஷ்டிக்கவேண்டும்.

௱-வது.

வினா. திரயோதசி திதியில் சிறந்ததற்குக் காரணமென்ன?

விடை. கங்காதரமூர்த்தியாகிய பரமசிவன் ஆலகால விஷமுண் டருளினபோது ஒருக்ஷணநேரம்

சும்மாவிருந்தார் அன்று ஏகாதசிதிதி அப்போது தேவர்கள் பரமசிவனை அருச்சித்துக்கொண்டிருந்து மறுநாள் துவாதசி திதியில் பாரணஞ்செய்து பூர்த்தியடைந்தார்கள் அன்றுமறுநாள் திரயோதசி திதி பிரதோஷகாலத்தில் பரமசிவன் பராசத்தி எதிரில் சூலஞ்சுழற்றிக்கொண்டு கயிலாசகிரியில் ஒருசாமம் நடனஞ் செய்தருளினார் இந்தக் காரணத்தினால் திரயோதசி திதிப் பிரதோஷகாலத்தில் சிவதரிசனஞ்செய்கின்றவர் நந்திதேவர் பிசத்தைப்பரிசித்து நந்திதேவராகிய ரிஷபதேவருடையயிரண்டுகொம்பு மத்தியில் பிரணவசகிதமாக அரகரவென்று சொல்லிக்கொண்டு சிவலிங்கதரிசனஞ் செய்யவேண்டும் இவ்வாறு தரிசிக்கும் சிவனடியார்கள் சிவசாரூபம் பெறுவார்கள் சனிப்பிரதோஷமிகுந்த சிறப்புள்ளதாக ஆகமத்திற் சொல்லுகின்றது சிவலிங்கதரிசனஞ்செய்கின்றவர்கள் வில்வத்தினால்சிவார்ச்சனை செய்விக்கவேண்டும் அதற்குத்தக்க தட்சனை கொடுத்தால்தான் அர்ச்சனை செய்ததாகப் பலன் சித்திக்கும் பிரதோஷம்விரதம் அனுஷ்

டிப்பவர்கள் சிவதரிசனஞ்செய்து பின்பு போசனஞ் செய்யவேண்டும் சிவனடியார்களுக்கு அமுதுபடைத்துப் பின்புபுசிப்பது உத்தமம்.

௱க-வது.

வினா. பிரதோஷ விரதம் அனுஷ்டித்துப் பேறுபெற்றவர்கள் யார்?

விடை. உசேனிமாகாளமென்னும் நகரத்துக் கரசனாகிய சந்திரசேனமகாராஜன் சனிப்பிரதோஷ விரதம் அனுஷ்டித்து இம்மையில் அரசர்களெல்லாம் தன்னை வணங்கும்படி செங்கோல் செலுத்திச் சிவபதம் பெற்றனன் இந்தராசன் பூசைசெய்ததைப் பார்த்த ஒரு இடைப்பிள்ளைக்கு பக்தியுண்டாகி வீதியில் மணலினால் ஆலய முதலானதுகளும் அமைத்துக்கொண்டு ஒருசில்லையை நாட்டிச் சிவலிங்கமாகப் பாவித்துப் பூசைசெய்து பேறுபெற்றான் இவ்விரண்டு சரித்திரமும் பிரமோத்தரகாண்டத்திற்கண்டுகொள்க உஜ்சேனி மாகாளமென்பது பாடல்பெற்ற ஸ்தலம் பதிகத்தில் உஞ்சேனைமாகா

ளம் உறையிலோத்தூர் இது கேக்ஷத்திரக்கோயி லிருக்கின்றது அந்த ஸ்தலத்துப் பதிகமில்லை கிலமாய்விட்டது உஞ்செனியென்பது ஸ்த லம்மாகாளமென்பது திருக்கோயில் இவ்வாறு சிவஸ்தலங்களில் மூலயத்தின் பேர்பேறேயிரு க்கின்றது மதுரைஸ்தலம் திருவாலவாய் ஆல யம் இவ்வாறு மற்றதும் விசாரித்து அறிந்து கொள்க உஞ்செனிமாகாளமென்பது வடதே சத்திலிருக்கின்றது விக்கிரமாதித்தராசன் அ ரசுசெய்த பட்டணமிதுதான் அம்பர்மாகா ளம் இரும்பைமாகாளம் என்றிரண்டு இந்தத் தேசத்திலிருக்கிறது.

பிரதோஷ விரத மிருப்பவர்கள் தேச அசக்தியி னால் நிறுத்திவிடுகிறதா யிருந்தாலும் மேலும் இடை விடாமல் அனுஷ்டிப்பதாயிருந்தாலும்உடனுக்குடன் உத்தியாபனஞ் செய்யவேண்டும் அப்படிசெய்யாமலி ருந்தும் தேகம் நழுவிவிடுமானால் விரதபலன் சித்தியி ல்லையாம் ஆதலினால் ஆகமவிசாரணை யுள்ளவர்களால் தெரிந்துக்கொண்டு நடக்கவேண்டும் எந்தவிரதத்துக் கும் இந்தக் கிரமமுண்டு.

௱உ-வது.

வினா. சிவதரிசனஞ் செய்யும்போது நந்திதேவருக்குஞ் சிவலிங்கபெருமானுக்கு மத்தியிற்போகலாமா?

விடை. அப்படிபோவது முப்பத்திரண்டு குற்றங்களிலொன்றாம் ஆதலாற் போகலாகாது.

௱௩-வது.

வினா. மேற்சொல்லிய குற்றம் யாது?

விடை. நந்திதேவருக்குஞ் சிவலிங்கப் பெருமானுக்கு மத்தியிற்போகுதல் தரிசனைசெய்தபின் புறங்காட்டிவருதல் ஒருகை குவித்துத் தரிசித்தல் ஒரு பிரதக்ஷணஞ்செய்தல் மேலே யுத்தரியம் போட்டுக்கொண்டு தரிசித்தல்கோபுரச்சாயை கடத்தல் கோயிலில் உண்ணுதல் நித்திரைசெய்தல் நிர்மாலியைத் தாண்டுதல் அதனைத் தீண்டுதல் கையினால் விக்கிரகங்களைத் தீண்டுதல் ருத்திர கணிகையரைக் கையினால் தீண்டுதல் அவர்களோடு பேசுதல்பார்க்குதல் வீணானவார்த்தைகள் பேசுதல் கோயில் காரியமல

லாத சொல்லைச் சொல்லுதல் தான் சொல்லாவிட்டாலும் ஒருவர் சொல்லுவதைக் கேட்குதல் உத்தமர்களை அவமதித்தல் அற்பர்களை மதித்துப்பேசுதல் அவ்விடத்திலிருக்கும் சிவசொத்தாகிய பொருளை அபேக்ஷித்துப் பார்க்குதல் வேதங்களால் சொல்லப்படாத சிறுதெய்வங்களைப் பணிதல் வேதமுதலான கலைகள் பாடமோதுதல், உன்னதாஸனத்திலிருத்தல் ஆசனத்திருத்தல் ஒருவரைப் பார்த்து நகைத்தல் பிணங்குதல் முதலான துற்குணங்களைப் பாராட்டுதல் சிரேஷ்டமான பாடலையன்றி மற்றப்பாடலை மதித்துக் கேட்குதல் திரிசந்தி யல்லாத காலங்களில் ஆலயத்திற் செல்லுதல் இரண்டொரு பிரதக்ஷணஞ்செய்தல் சிரேஷ்டமல்லாத கீர்த்தனங்கள் பாடுதல் என்னும் இவைகளாம் இதுகளுமன்றி உமிநீர் துப்பவேண்டுவதா யிருந்தாலும் அபானவாயு பறிவதாயிருந்தாலும் துரிதமாக ஆலயத்துக்கு வெளியில் வந்துவிடவேண்டும் இதுபோலவே சிவதீர்த்தத்திலும் நந்தவனத்திலுஞ் செய்யப்படாத காரியஞ் சிலவுண்டு.

௱௪-வது.

வினா. இந்தவிடத்தில் செய்யத்தகாதகாரியமென்ன?

விடை. சலதீர்த்தத்தில் உமிநீர் துப்பலாகாது மூக்குச் சீந்தலாகாது மற்றுமுள்ள அசுசியான காரியஞ் செய்யலாகாது நந்தவனத்து மிப்படியே.

௱௫-வது.

வினா சிவதீர்த்தமாவது யாது?

விடை. சிவாலயத்துக்கருகே யிருக்குந் தீர்த்தமாம் இதுசுத்தம் அசுத்தமா யிருந்தாலும் சிவகங்கையாகச் சிந்தித்து ஸ்நானஞ் செய்யவேண்டும் இதுமூர்த்திதலம் என்பதனோடுசேர்ந்தது.

௱௬-வது.

வினா. நந்தவனம் சிரேஷ்டமானதற்குக் காரணம் என்ன?

விடை. சிவார்ச்சனைக்கு யோக்கியமான பூஞ்செடிகளை யுடையதாகையால் சிரேஷ்டமாயது இதுவுமன்றிப்பரமசிவம் சிலமலர்களிலும் பாரசக்தி

சிலமலர்களிலும் வாசமாயிருப்பதினாலும் சிரேஷ்டமாயது இதன்விபரம் புட்பவிதி கூறும் புஸ்தகத்தில் விளக்கமாகச் சொல்லியிருக்கிறது

௱எ-வது.

வினா. சிவலிங்கப்பெருமானிலும் பேதமிருக்குமோ?

விடை. மனிதர்களாலும் முனிவர்களாலும் தேவர்களாலும் சிவகணங்களாலும் ஸ்தாபனஞ்செய்த லிங்கங்களுமன்றி சுயம்புமூர்த்தியாகப் பூமியிலிருந்துண்டான லிங்கமென்றும் அஞ்சுவகையுண்டு இவ்வைந்துவகை சிவலிங்கங்களையுந் தரிசிக்கலாம்

௱அ-வது.

வினா. ஆனால் தரிசனத்திலுண்டாகும் பலன் சமமாயிருக்குமா?

விடை. ஒன்றுக்கொன்று விசேஷமாயிருக்கும் எவ்வாறென்னில் மனிதர்களால் ஸ்தாபிக்கப்பட்ட சிவலிங்க தரிசனத்தினாலுண்டாகும் பலனிலும் முனிவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட சிவ

லிங்கதரிசன பலன் அதிகம் இவ்வாறே மற்று மூன்றுக்குங் கண்டுகொள்க மனிதர்களால் ஸ்தாபிக்கப்படும் சிவலிங்கத்தையும் மற்றச் சிவலிங்கங்களுடன் சேர்த்துச் சொல்லியிருப்பதினால் அவர்களைச் சாமானியர்களாக நினைக்கப்படாது சேரசோழ பாண்டியராஜாக்கள் முதலாகிய க்ஷத்திரியர்களேயாம். இவ்வரசர்களிடத்தில் சிவநேசமும் ராஜநீதி முதலான தருமமும் விசேஷமாயிருந்ததினால் இவர்களுக்கும் பரமசிவனுடைய திருவருள் பூரணமாகக்கிடைத்திருந்தது இவர்களுக்கும் சாயானுக்கிரகமுண்டு.

௱௯-வது.

வினா. மற்றமனிதர்களால் ஸ்தாபிக்கப்படாதோ?

விடை. சிவதரிசனத்துக்குச் சமீபத்தில் ஆலயமில்லாத கிராமங்களாயிருந்தால் சிவப்பிரதிஷ்டைசெய்யவேண்டியதுதான் சிலமான ஆலயங்களிருக்குமானால் அதைத் தள்ளிப் புதியதாகப் பிரதிஷ்டை செய்விக்கலாகாது அப்படி ஸ்தாபிக்குமிடத்தில் தான் கர்த்தாவாயிருந்து ஸ்தா

பிக்கலாம் ஆதிசைவப் பிராமண கர்த்தாவாக நியமிக்க வேண்டுமென்றும் ஆகமங்களிற்சொல்லப்படுகின்றது.

௱ய. வது.

வினா. நூதனமாக ஆலயம் ஏற்படுத்தி சிவலிங்கம் ஸ்தாபிப்பவர்கள் பக்கத்தில் ஒரு லிங்கம் பூசையில்லாம லிருந்தால் அதைக் கொண்டு வந்து ஸ்தாபிக்கலாமா?

விடை. கிரியாலிங்கமாயிருந்தால் ஸ்தாபிக்கலாகாது சுயம்பு லிங்கமானதா யிருந்தால் கொண்டு வந்து ஸ்தாபிக்கலாம் இந்தக்காரியம் ஆகமர்தைநன்றாகவிசாரித்துச்செய்யவேண்டும்.

௱கக-வது.

வினா. சுயம்பு லிங்கம் பூமியில்தானே யுண்டானதா யிருந்தால் அதை எப்படிக்கொண்டுவரலாம்.

விடை. இவ்விடத்தில் சுயம்புலிங்கமென்றது கிரியா லிங்கம்போற் செய்யப்படாமையால் உண்டா யிருக்கும்அதுகாசிலிங்க மென்றும்பாணலிங்க மென்றுஞ் சொல்லப்படும்.

௧௮௨-வது.

வினா. பாடல்பெற்ற ஸ்தலங்களிலிருக்கும் ஆலயங்களுக்கு அபாயமான காலம் நேரிடுவதாயிருந்தாலோ?

விடை. அப்போர்க்கொத்த காலங்களில் அங்கிருக்கும் சுயம்புமூர்த்தி சலனப்படுத்தத்தக்கதாயிருந்தால் வேறேஆலயம் ஏற்படுத்தி அந்தச் சிவலிங்கத்தைக் கொண்டுவந்து ஸ்தாபிக்கலாம்; சலனப்படுத்தக்கூடாததா யிருந்தால் வேறே லிங்கம்ஸ்தாபிக்கப்பட்டாலும் சுயம்புமூர்த்தி ஸ்ரேயமாம்.

௧௮௩-வது.

வினா. பரமசிவம் எந்தச் சிவலிங்கத்தி லிடத்தில் விசேஷமாய் மூர்த்திகரித்திருக்கிறார்.

விடை. சுயம்புலிங்கத்தில் சார்வதாகாலமும் மூர்த்திகரித்திருக்கிறார்.

௧௮௪-வது.

வினா. பரமசிவம் எங்கும்பரிபூரண மானதா யிருக்க சிவாலயத்தில் சிவலிங்கத்திலிடமாக மூர்த்தி

கககூ-வது.

வினா. திரிசந்திகாலங்களில் சிவதரிசனஞ்செய்வதில் இன்னகால தரிசனத்தினால் இன்னின்ன பலனை சித்தியாமென்கிறதுண்டோ.

விடை. காலசந்தியில் தரிசித்தால் அன்றுநேரிடும் பாவநிவர்த்தியென்றும் உச்சிக்கால தரிசனத் தால் அந்தச் சென்மத்தில் நேரிடும் பாவம நிவர்த்தியென்றும் சாயுங்கால தரிசனத்தால் சென்னங்கள் தோறும நேரிட்ட பாவங்கள் நிவர்த்தியாமென்றும் அறிந்துகொள்க.

ககஎ-வது.

வினா. பலநதிகளுக்குள் கங்காநதி சிரேஷ்டமானத ற்குக்காரணமென்ன?

விடை. அந்நதி பார்வதி தேவியாருடையதிருவிரல் களினிடமாகஉண்டானதாகையால்சிரேஷ்ட மாகியது.

ககஅ-வது.

வினா. என்ன காரணத்தினால் பார்வதி தேவியாரு டையதிருவிரல்களி லுண்டாயது?

விடை. ஒருகாலத்தில் பார்வதி தேவியார் பின்னாக வந்து பரமசிவனுடைய இரண்டு திருக்கண்களையும் மூடினபோது பத்துவிரல்களினின்றும் உண்டாயது.

கககூ-வது.

வினா. அப்படிக்குண்டாகிய கங்கையைப் பரமசிவன் திருமுடியில் அணிந்து கொண்டதற்குகாரணமென்னை?

விடை. அந்தக் கங்கையானது ஏழுகடலு மொன்றாய்க்கலந்ததுபோல் பெருவெள்ளமாகிஆயிர முகத்துடன் உலகமெங்கும் பரந்ததைப் பிரமதேவன் முதலாகியதேவர்கள் கண்டுபயந்து கயிலாசகிரிக்குச் சென்று சுவாமியைத் தொழுது முறையிட்டுக்கொள்ளக் கிருபைகூர்ந்து அந்த வெள்ளமெல்லாஞ் சுருக்கிவரும்படி திருவுளங் கொண்டு வந்த வெள்ளத்தைத் தமது சடையில் ஒரு துளியாகத் தரித்துக் கொண்டார் இந்தக் காரணத்தினால் சுவாமிக்குக் கங்காதர னென்று பெயர் சந்திரனைத் திருமுடியில் தரித்துக்கொண் டிருப்பதனால் சந்திரசேகர னென்றுபெயர்.

௧௨௦-வது.

வினா. அந்த நதி பூலோகத்தில் வந்ததற்கு காரண
மென்ன?

விடை. பகீரதனென்னும் ஒரு அரசனால் வந்தது.

௧௨௧-வது.

வினா. சந்திரனைச் சடைமுடியில் ஏன் தரித்துக்
கொண்டிருக்கிறார் அதுவுமொருகலையுள்ள
தாயிருக்கின்றதே யல்லது சோடசகலையுள்ள
தாக விருக்க வில்லையே.

விடை. தக்கன் தன்னுடைய இருபத்தேழு பெண்
களையுஞ் சந்திரனுக்கு விவாகஞ் செய்து
கொடுத்தபோது இவர்களெல்லாரிடத்திலும்
மொரே தன்மையான இஷ்டமுள்ளவனாயிரு
வென்று சொல்லிய அவ்வண்ணமாக இருந்த
சந்திரன் தன் ஸ்திரீகளுள் மிகுந்த சவுந்
தரியமுள்ள கார்த்திகை உரோகணியென்னு
மிரண்டு ஸ்திரீக ளிடத்தில் மாத்திரம்
மிகுந்த இஷ்ட முள்ளவனாய் மற்ற இரு
பத்தைந்துஸ்திரீகளிடத்திலு மிஷ்டமில்லாம
லிருந்தான் அவர்கள்மனம் வருந்தித் தக்கனி

டத்திற் சொல்லிக்கொண்டார்கள் அவன்கோ
பங் கொண்டவனாய்ச் சந்திரனுடைய சோ
டசகலைகளும் அறிவுழும்படி சபித்தான் அக்
தச் சாபத்தின்படி தின மொவ்வொருகலை
யாகப் பதினைந்துகலை குறையக்கண்ட சந்தி
ரன் துயரங்கொண்டு தேவேந்திரனிடத்திற்
சொல்ல இந்தச்சாபம் என்னால் நீக்கத் தக்க
தல்லவென்ன பிரமதேவனிடத்திற் போய்ச்
சொல்லிக்கொண்டான் நான் சொன்னாலுந்
தக்கனிந்த சாபத்தை நிவிர்த்தி செய்யமாட்
டான் நீ ஸ்ரீகயிலாச கிரிக்குப்போய் பரமசி
வனிடத்தில் விண்ணப்பம் பண்ணிக்கொண்
டால் இந்தச்சாபம் நிவர்த்தி யாகுமென்று
பிரம தேவன் சொல்ல அதைக் கேட்டுக்
கொண்டு சந்திரன் கயிலாசகிரிக்குப் போய்
பரமசிவனைப் பணிந்து தோத்திரஞ்செய்தான்
பரமசிவன் கிருபை கூர்ந்து சந்திரனிடத்தி
லிருந்த ஒருகலையினையுந் தமது சடைமுடியில்
தரித்துக்கொண்டு இது உன்னிடத்திருந்தால்
தக்கன்சாபம் இதையும் அழித்துவிடும் இனி
நம்முடைய திருமுடியி லிருக்கிற கலையைத்

தொடராது இந்தக்கலை அழியாமலிருப்பதி
ஞல் உனக்கு முன்னிருந்ததுபோல் நாளுக்கு
நாளொவ்வொரு கலையாக வளர்ந்து சோடச
கலைகளும் நிறைவுபடும் அப்படி நிறைந்தா
லும் வளர்ந்ததுபோல மறுபடி குறைவுபடுகி
றதும் வளர்வதுமாக இருக்குமென்று அநுக்
கிரகஞ்செய்தார் சந்திரன் சந்தோஷத்துடன்
சுவாமியைத் தோத்திரஞ்செய்து விடைபெற்
றுக்கொண்டு தன் பதவியிற் போய்ச் சேர்ந்
தான்.

௱௨௨-வது.

வினா. பரமசிவன் ஒருதிருக்கரத்தில் மான்தரித்துக்
கொண்டிருப்பதற்குகாரணமென்ன?

விடை. அந்தமான் தாருகாவனத்துரிஷிகளால்அனுப்
பப்பட்டது அவர்கள் ஏன் அனுப்பினார்களெ
னில பரமசிவன் பிட்சாடனமூர்த்தமாகத்
தாருகாவனத்துக் கெழுந்தருளின போது
ரிஷிபத்தினிகள் கண்டு மோகித்துத் தங்கள்
கற்பு குலைந்தார்கள் அதைக்கண்டு தாருகா
வனத்துரிஷிகள் கோபமுடையவர்களாய்ஒரு
வேள்வி செய்து அதி லுண்டான புலியை

நோக்கிச் சிவனைக் கொல்லும்படி யேவ அத
னைக்கொன்று தோலையாடையாக அணிந்துக்
கொண்டார் பின்னும் அந்தவேள்வியில் மா
னுண்டாகிவர அதனை யிடக்கையில் வைத்துக்
கொண்டருளினார் பின்பு மழுவுண்டாய் வந்
தது அதனை ஆயுதமாக வைத்துக்கொண்டார்
பின்பு சர்ப்பங்களுண்டாய்வர அதுகளை ஆபர
ணங்களாகத் தரித்துக் கொண்டார் முயலக
னென்னும் அசுரனுண்டாகிவர அவனைக்கீழே
தள்ளிக்கொண்டு முதுகிலேறிநின்றார் மந்திர
ங்களையேவினார்கள் அவைகள் தமருகரூபங்
கொண்டுவரத் திருக்கரத்தில்வைத்தருளினார்

௱௨௰-வது.

வினா. பன்றிக்கொம்பு ஆமையோடு மீன்கண் எலும்பு
மாலை-கையில்கபாலம் இவைகளையேன் தரித்
துக்கொண்டிருக்கிறார்.

விடை. விஷ்ணுகடலில்மச்சாவதாரங்கொண்டுவேதங்
களை அபகரித்துக் கொண்டுபோன ஒரு அசு
ரனைவதைத்து இரத்தவெள்ளங்குடித்து மய
க்கமுற்று உலகம் வருத்தும்படி கடலைக்கலக்

கியபோது தேவர்கள் கயிலையிற்சென்றுதாங்
கள்வந்தகாரியத்தை விண்ணப்பம் பண்ணிக்
கொள்ளச்சுவாமி கிருபைகூர்ந்து ஒருவயிர
வரை அனுப்பஅவர் போய்வலைவீசி யந்தமீன்
கண்களைப் பெயர்த்துக் கொண்டுவர அவை
களைத் தேவர்கள் வேண்டுதலினால் மார்பில்
தரித்துக் கொண்டருளினார்.

௨. ஆமையோடுதரித்துக் கொண்டதற்குக் காரண
மாவது அமிர்தமுண்டாகும்படி தேவர்கள்பாற் கட
லில் மந்திரகிரியைமத்தாக நாட்டிவாசுகியாகிய பாம
பினைத்தாம்பாகச் சுற்றிவலிக்கும்போது அந்தமந்திர
கிரிகடலிலாழ அதைக்கண்டுதேவர்கள் விஷ்ணுவைத்
தோத்திரஞ்செய்ய அவர்வந்துஆமையாகியமந்திரகிரி
தன்முதுகில்நிற்கும்படி காக்கினகாலத்தில் மமதைக
கொண்டு கடலைக்கலக்க அதைக்கண்ட தேவர்கள் கயி
லாயபதிக்கு விண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள
சுவாமிகிருபை கூர்ந்து விநாயகரை அனுப்ப அவர்
போய்தம்முடைய துதிக்கையைநீட்டிக்கடல்நீரைவெ
ல்லாம உறிஞ்சுகையில் ஆமையும் அந்தத் துதிக்கைக்
குள் போய்விட்டது பின்புவிநாயகர் நீரைச்சிந்தின
அந்தகருடன்ஆமையும் வெளியேவந்துவிழுந்து மதி

மயங்கிக்கிடக்க அதைவிநாயகர்கண்டு அதன் ஓட்டினைத்தன்னுடைய தந்தத்தினால் பெயர்த்துக்கொண்டு வந்து சுவாமிக்கு காணிக்கையாகக் கொடுக்கக்கண்டு மகிழ்ந்து தேவர்கள் வேண்டுதலினால் தலைமாலையுடன் அந்த ஆமையோட்டையும் மார்பில்தரித்துக் கொண்டருளினார்.

௩-பன்றிக் கொம்பினை யணிந்துக்கொண் டிருப்பதற்குக்காரணம் இரணியாட்சனென்னும் ஒருஅசுரன் பிரமதேவனைநோக்கித் தவஞ்செய்துவரம் பெற்றுக் கொண்டு போகிறவன் பூமியைக்கவர்ந்துக் கொண்டு போய்விட்டான் அதையறிந்துவிஷ்ணு வராகஅவதாரஞ்செய்து அவனைக்கொன்று மமதையடையதேவர்கள்கயிலாயபதிக்குவிண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள் பரமசிவன் திருவுளமிறங்கிச் சுப்பிர மணியரையனுப்ப அவர்போய் அந்தபன்றியின் தலையை வேலினால் குத்தி அமுக்கி அதன் கொம்பினைப்பறித்துக் கொண்டுவந்து சுவாமியினிடத்தில் வைக்க அதை முன் போலத் தரித்துக்கொண்டார்.

௧௨௯-வது.

வினா. இதுகளுமன்றி யெலும்புமாலைசிரமாலையணிந்துக்கொண்டிருப்பதற்குக் காரணமென்ன?

விடை. பிரமவிஷ்ணுக்களை யுண்டாக்கியவர்களில் பிரமனைக் கொண்டு உலகத்தை சிருஷ்டித்தும் விஷ்ணுவைக்கொண்டு ரட்சித்தும் பின்பு சங்கரித்தும் பலவாறு இம்முத் தொழில்களைச் செய்கையில் பிரமவிஷ்ணுக்கள் முடிவானகாலத்தில் சங்கரித்து அவர்கள் எலும்புகளையும் சிரங்களையு மாலைகளாக அணிந் தருளினார் அவர்களுக்கு நன்மை யுண்டாக வேண்டுமென்று தரித்துக்கொண்டதேயல்லது பெருமைபாட்டுக்காகத்தரித்துக்கொண்டதே யல்லமுன்பொரு கற்ப முடிவில் இவர்களையெல்லாம் நெற்றிக்கண் பொறியால் நீருபடுத்தி அந்தப் பொடியைத் தமது திருமேனியில் தரித்துக் கொண்டருளினார் இதுவும் அவர்களுக்கு நன்மையாக வேண்டுமென்கிற காருணியமேயாம் முன்னொருகாலர் பிரம்மா அகந்தை கொண் டிருந்தான் அதை யடக்கும் பொருட்டு அவனுக்கிருந்த அஞ்சு தலையில் நடுத்தலையைக் கிள்ளிக் கையிற் கபாலமாக வைத்தருளினார் அது முதல் பிரமனுக்குச் சதுர்முகனென்றும் நான் முகனென்றும் பெ

யாராயது பரமசிவன்சிரமாலை யணிந் திருப்பதி
னால சிரமாலி யென்னும் கபாலந் தரித்துக்
கொண்டிருப்பதினால் கபாலியெனவும் பெய
ருண்டாயது.

௧௨௫-வது

வினா. கண்டத்தில் விஷம் பொருந்தி யிருப்பதற்குக்
காரணமென்ன?

விடை. தேவர்கள் அமிர்தமுண்டாவதற்காகப் பாற்க
டல் கடைந்தபோது ஆலகால விஷமுண்
டாயது அதைக்கண்டு தேவர்கள் முறையிட
அவர்களை ரட்சிக்கும் பொருட்டு விஷத்தை
யுண்டு கண்டத்தில் வைத்தருளினார் இந்தக்
காரணத்தினால் காளகண்டன் கறைமிடற்
றன் நீலகண்டனென்றும்பெயர்.

௧௨௬-வது.

வினா. பரமசிவனுக்கு ரிஷபவாகன முண்டானதற்
குக் காரணமென்ன?

விடை. தருமதேவதையானது பிரம்மவிஷ்ணுமுதலா
னவர்களெல்லாம் அழிந்துபோவதைக் கண்டு
தானவ்வாறு மாண்டுபோகாமல் என்றும்நித்

நியமாயிருக்க வேண்டுமென்கிற எண்ணங் கொண்டு ரிஷபரூபமாகிப் பரமசிவனிடத்திற் சென்று பணிந்து கர்த்தனே நானிறவாம லிருக்கும்படி அடியேனை வாகனமாகக்கொண் டருளவேண்டுமென்று தோத்திரஞ் செய்ய சுவாமி கிருபையினால் அதனைத் தனக்கு வா கனமாகக் கொண்டருளினார் இதுவு மன்றி விஷ்ணுவு மொருகாலத்தில் ரிஷபமாகிக் கயி லாயபதி தன்னை வாகனமாகக் கொண்டரு ளும்படி பெற்றுக்கொண்டார்.

கஉஎ-வது.

வினா. பரமசிவன் யானைத்தோல் போத்திருப்பதற் குக் காரணமென்ன?

விடை. யானைரூபமாகத் தோற்றிய கயாசுர னென் பவன் பிரமதேவனை நோக்கித் தவஞ்செய்து தேவர்களை யெல்லாம் வென்று செயம்பெற வேண்டு மென்கிற வரங் கேட்டான் பிரம தேவ னப்படியே வரங் கொடுத்து பரமசிவ னெதிரில் போகாதே போனால் இந்த வரம் அழிந்து போமென்று சொல்லக் கேட்டுக்

கொண்டு போனவன் தேவேந்திரன் முதலானவர்களுடன் யுத்தஞ் செய்து வென்று திரியும்போது முனிவர்கள் கண்டு பயந்து ஓடிக் காசி சேர்ந்தார்கள். அங்கு மவர்களைத் தொடர்ந்து சென்றான். அவர்கள் கண்டு பயந்து மணிகர்ணிகை யென்னும் ஆலயத்துக்குப் போய்ப் பரமசிவனைச் சரணாகதி என்றடைந்தார்கள் கயாசுரனுக்குக் காலமுடிவு சேரிட்டதினால் பிரமதேவன் சொன்னதை மறந்து அங்குஞ் சென்று முனிவர்களைக் கொல்ல வேண்டுமென்று உறுமுகிறபோது சுவாமி கோபத்துடன் உக்கிர மூர்த்தியாய்க் கயாசுரன் மத்தகத்தை மிதித்து உடலைக் கிழித்துத் தோலையுரித்துப் போர்த்தருளினார்.

கஉ௮-வது.

வினா. கயிலாசகிரியில் நந்திதேவர் காவலென்கிறார்களே அவருடைய வரலாறென்ன?

விடை. சிலாதர முனிவருடைய தவத்தினால் அவருக்குப் புத்திரராக அவதரித்துத் திருவையாற்றில் தவஞ்செய்து பரமசிவனுடைய கிருபை

யினால் மான்மழுகளை கண்ட முதலியவை பெற்று வெள்ளிப் பிரம்புஞ் சுரிகையும் அருளிச்செய்ய அவைகளுடனே காவலும் பெற்றுக்கொண்டு கணங்களுக் கெல்லாந் தலைமையானவராயிருக்கின்றார்.

கஉகூ-வது.

வினா. சைவசமயத்துக்கு விபூதி ருத்திராட்சங்கள் முக்கியமானவைக ளென்பதற்குக் காரண மென்னை?

விடை. பரமசிவனுடைய திருமேனியி னிடத்திலும் திருநேத்திரத்திலும் உண்டானமையால் முக்கியமாயின.

கஙo-வது.

வினா. அவைக ளுண்டானவகை யெப்படி?

விடை. பரமசிவனுடைய அக்கினிபோன்ற திருமேனி மேல் இயல்பாகப் பூத்தது அது அநாதியான விபூதி பின்பு தேவர்முதல்சராசரங்களையெல்லாம் இருதிக்காலத்தில் நீராக்கித் தம்முடைய திருமேனியில் தரித்தருளினரோ அது ஆதிவிபூதி நெருப்பின்மேல் நீறுபூத்திருப்பது இப்போது

திருஷ்டாந்தமாகக் காணலாம் இவ்வாறுசுவாமி திருமேனியிற் படிந்ததாகையால் விபூதிதரித்துக் கொண்டிருக்கிறவர்களை சிவனடியார்களாவார்கள் அத்தையணிவதனால் பலன் என்னையெனில் மகாபாதகங்களெல்லாம் நீங்குமென்றும் அப்படிக்கொத்த விபூதியைப் பசுவின்சாணத்தினால் விளைக்கவேண்டுமென்றும் அப்படி விளைவிப்பதில் கற்பம் அநுகற்பம் உபகற்பமென மூன்றுவிதி யுண்டென்றும் அவற்றுள் ஒருவிதிப்படி விளைவித்துத் தரித்துக்கொள்ள வேண்டுமென்றும் ஆகமங்களில் சொல்லுகின்றது.

விநா. சற்பவிதியாவதெப்படிக்கொத்தது?

விடை. பங்குனிமாசத்தில் ஈசானத்தாள் மேய்ந்துவந்த நல்லபசுக்களைப் பரிசுத்தமுள்ள தொழுவத்திற் சேர்த்து அவைகளிடு நற்சாணத்தைப் பூமியில் விழவொட்டாமல் தாமரையிலையி லெடுத்துக் கொண்டு மேலுள்ளவழுவை நீக்கிவிட்டு உண்டாக்கி முன் விளைவித்திருக்கிற சிவாக்கினியிட்டுப் பக்குவமாக வெந்தபிற்பாடு எடுத்துப் புது

ப்பாலையிலிட்டு வேண்டியபட்டில் விபூதிக்கோ விலில் வைத்துக்கொண்டு பூமியில் சிந்தாமல் தரித்துக்கொண்டால் செனனமரண துக்கம் நீங்கி மோட்சம் அடையலாம். இவ்வாறு விளை விப்பதுதான் கற்பவிதி சாணத்தை யேந்தும் பேர்தும் அக்கினியிலிடும்போதும் வெந்தபின்பு எடுக்கும்போதும் புதுப்பானையில் வைக்கும் போதும் மந்திரஞ் சொல்லவேண்டுவ துண்டு அதைக் குருவினால் அறிந்துக்கொள்ள வேண் டும்.

வினா. அனுகற்பவிதி எப்படி விளைவிப்பது?

விடை. காட்டிலுலர்ந்த பசுவின்சாணத்தை யுதிர்த்துக் கோசலம்விட்டுப் பிசைந்து சிவாக்கினியிலிட்டு பக்குவப்படுத்துவதாம்.

க௱ரு-வது.

வினா. உபகற்பவிதியாவது?

விடை. இயல்பாகவெந்த காட்டுச்சாம்பல் சிவாலயம டைப்பளிச்சாம்பல் இவைகளை யெடுத்துக் கோ சலம்விட்டுப் பிசைந்து உண்டையாக்கிச் சிவாக்

கினியிலிட்டுப் பக்குவப்படுத்தி முன்போல எடுத்துவைத்துக்கொண்டுதரித்துக்கொள்ளுவதாம.

க௱௪-வது

வினு. விபூதிக்கோவில் எதனுலமைக்கப்பட்டது?

விடை. வஸ்திரம்-புலித்தோல்-மான்றோல் இவைகளால் அமைக்கவேண்டும் பையேயன்றி மேலுமுண்டு.

க௱௫-வது.

வினு. எல்லாச் சொத்துக்களிலும் பரசிரேஷ்டமான தெவை?

விடை. புண்ணியநதி தீர்த்தங்கள் முனிவர்கள்போலான தேவர்கள் வாசமாகும்படி அங்கங்களுடைய உற்பவமான திருநீறும் தெய்வலோக கத்திலிருக்கின்ற காமதேனுவின் குலமாதையினுலும் சிரேஷ்டமானது இந்தப்பெருமையெல்லாம் பெத்தது விவரமாகச்சொன்னுல் விரிவாகுமாதலால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது ஆகமபுராண விசாரணையுள்ள பெரியோர்களால் விவரமாக அறிந்து கொள்ளலாம்.

டைய பக்குவமறிந்து செய்யத்தக்கது முதல் தீட்சைக்குச் சமயதீட்சையென்கிறபெயர் எனைத்தினாலுண்டாயதெனில் இந்தத் தீட்சை செய்துக்,கொண்டால் சைவசமயத்துக்கு உரியவனாகின்றான் அதனால் சமயதீட்சையென்று பெயர் இந்தச் சமயதீட்சையினாலுஞ் சிறப்புள்ளதாகையால் விசேஷதீட்சையெனவும் மோட்சத்தைத்தக்கதாகையால் நிருவாணதீட்சையெனவும் மற்ற இரண்டு தீட்சைக்கும் பெயருண்டாயது நிருவாணமென்பது மோட்சத்துக்கொரு பெயர்.

௧௱௬௰-வது.

வினா. இந்தத் தீட்சைக்குருவாயிருப்பவர்கள் எந்த வருணத்தாராயிருக்கவேண்டிய?

விடை. ஆதிசைவப் பிராமணகுலத்தில் பிறந்து உபநயனவிதியும் இம்மூன்றுவகை தீட்சையும் பெற்று ஆசாரிய அபிஷேகமுஞ் செய்துக்கொள்ளப்பட்டவராயிருக்கவேண்டும் ஆகமத்தில் லட்சங் கிரந்தம் முகஸ்தமுள்ளவராயிருந்தாலே உத்தமம் குருவென்று பெயர் (௫௰௲) (௨௰௲) முக

ஸ்தமாயிருந்தல் மத்திமம் அதமம் என்கிற மதத்தில் வைக்கப்படுவார்கள் (இது முக்கிய பட்சம்.)

கசுய-வது.

வினு. விபூதி தரித்துக்கொண்டாலே போதுமே உருத்திராட்சமுந் தரித்துக்கொள்ள வேண்டியது என்ன?

விடை. விபூதியும் ருத்திராட்சமுஞ் சிவசின்னமாகையால் அவ்விரண்டுமே தரிக்கவேண்டும் இதுவுமன்றி விபூதியானது சிலவேளையில் வெயர்வை மழை முதலியவற்றால் குலைந்துபோனாலும் ருத்திராட்ச மிருந்தால் தோஷமில்லை ராட்சதரால் பிடிக்கப்படுகிற பாபம் அணுகாது.

கசுஉ-வது.

வினு. ருத்திராட்சம் எந்த இடத்தில் எவ்வாறு உண்டாயது?

விடை. பரமசிவன் திரிபுரசங்காரஞ் செய்யப்போன காலத்திற் கோபாவேசத்தினால் அவருடைய நேத்திரங்களில் நீர்த்துளிவிழ அதிலுண்டாயது இந்தக் காரணத்தினால் அதற்கு ருத்திரா

ட்சமென்கிற பெயருண்டாயது ருத்திரன் சிவன் அட்சம் நேத்திரம அதற்குக் கண்மணியென்னும்பெயர் சிவபூசை செய்கிறவர்கள் கழுத்தில் ருத்திராட்சமலலாமல் பூசிததால் அந்த பூசையைப் பரமசிவன் அங்கீகரித்துக்கொள்ளமாட்டார் ஆகல ல் சிவபூசைசெய்கின்றவர்கள் அவசியம் ருத்திராட்ச கண்டிகை தரித்துக்கொள்ள வேண்டும்.

௧௪௨-வது.

வினா. எத்தனை ருத்திராட்சந் தரித்துக்கொள்ளவேண்டுவது?

விடை. உச்சியிலொருமணி காதொன்றுக்கு ஆறுமணி விழுக்காடு இரண்டுகாதுக்கும் பனிரண்டுமணி சிரசில் நாற்பது கழுத்தில முப்பத்திரண்டு மார்பில் நூற்றெட்டு புயத்தில முப்பத்திரண்டு கைகளில இருபத்துநாலு இவ்வாறு தரிக்கவேண்டும்.

௧௪௩-வது.

வினா. ருத்திராட்சங்களி னிடைகளிலேதாவது மணிகள் கோர்க்கலாமா?

விடை. இடையிடை பவளம் ஸ்படிகமணி பொன்மணி இவைகளைக்கோர்த்து அணியவேண்டும் இதுகளோன்றி வில்வப்பழவோட்டையுஞ் சேர்க்கலாம் இவ்வாறு சேர்க்காமல் ருத்திராட்சங்களை மாத்திரம் கோர்த்து தரித்துக்கொண்டால் எத்தனைமணி சேர்த்தாலும் ஒருமணி யணிந்தாலுண்டாகும் பலனை கிடைக்கும் இந்த ருத்திராட்சங்களில் ஒருமுகம் பதினொருமுகம் பதினான்குமுகம் உள்ள மணிகளைவைத்துப் பூசித்தாலும் சிவார்ச்சனை செய்தால் உண்டாகும் பலன் கிடைக்கும்.

௧௪௪-வது.

வினா. விபூதிருத்திராட்சம் தரித்துக்கொள்ளவும் சிவதரிசனம் சிவார்ச்சனை செய்யவும் விசேஷமில்லாதமிருகமுதலான செந்துக்களுக்குச்சிவபுண்ணியம் எவ்வாறு சித்திக்கும்?

விடை. பரமேசுவரன் அநாதி கேவலத்திற்கிடந்த ஆன்மாக்களை அநாதிசிருஷ்டி செய்கிறகாலத்திலே தான் தலமாகவும் தீர்த்தமாகவும் மூர்த்தியாகவும் திருமேனிகொண் டெழுந்தருளிச் சிவஸ்

தலங்களிலே புழு முதலானவை சனித்தாலும் நசித்தாலும் சிவபுண்ணியமுண்டாகவும் தீர்த்தத்திலே மீன்முதலானதுகள் சனித்தாலும் நசித்தாலும் நாற்கால்மிருகங்கள் மனிதர்முதலானவர்கள் பக்ஷிகள் முதலானவைகள் தீர்த்தத்தைக் குடித்தாலும் முழுகினாலும் திவலைகள் தெறிக்கப்பட்டாலும் சிவபுண்ணியமுண்டாகவும் நெற்பயிர் முதலானவைகள் தீர்த்தம் பாய்ந்து விளைந்தாலும் அந்தத் தீர்த்தம் பாய்ந்து விளைந்த நெல்லைப் பறவைமுதலானவை புசித்தாலும் சிவபுண்ணியமுண்டாகவும் அருளினார் சிவலிங்கப் பெருமானுக்குச் செய்யும் அபிஷேகம் அருச்சனை நிவேதனம் முதலானவைகளுக்குரிய விருக்ஷாதிகளாகவும் நெல்முதலிய பயிர்களாகவும் பசு முதலாகிய மிருகாதிகளாகவும் சனிப்பித்து சிவபுண்ணியமுண்டாக்குவார்.

௧௪௪-ம் ஆ.

வினா. பசுமுதலான சிலமிருகங்கள் சிவலிங்கப்பெருமானுக்குச் செய்யும் அபிஷேக முதலானவைகளுக்கு எவ்வாறு உதவுகின்றன?

விடை. பசு தன்னிடத்திலுண்டாகும் பஞ்சகவ்வியம் கோரோசனம் இவைகளாலுதவுகின்றது பஞ்சகவ்வியமாவது பால் தயிர் நெய் கோமயம் கோசலம் என்பவைகளாம் இவ்வாறு அபிஷேகத்துக் குதவுதலுமன்றிப் பால் தயிர் நெய் நிவேதனத்துக்குப் உதவுகின்றது.

கசரு-வது.

வினு. இன்னமும் எதுக்கு உதவுகின்றது?

விடை. பசுவும் அதனினமாகிய எருதும் பேரி மத்தளமுதலான தோற்கருவி மூலமாகவும் யாழ் முதலான நரம்புக்கருவி மூலமாகவும் உதவுகின்றது.

கசசு-வது.

வினு. மற்ற எந்தமிருகம் இவ்வாறு உதவுகின்றது?

விடை. புழுகுபூனை கஸ்தூரிமிருகம் இவைகளுமுதவுகின்றது புழுகு என்பது புனுகு என வழங்குகின்றது மயில் விசிரி ரூபமாயுதவுகின்றது.

௧௪௭-வது

வினா விருட்சசாதிகள் எவ்வாறு உதவுகின்றன?

விடை. வாழை பலா மா தெங்கு முதலிய சில விருட்சங்கள் அபிஷேகத்துக்கும் நிவேதனத்துக்குமுரிய கனிவர்க்க மூலமாகவும் எலுமிச்சை நாரத்தை முதலாகிய சிலவிருட்சங்கள் அபிஷேகத்துக்கும் நிவேதனத்துக்கும் கனி மூலமாகவுமுதவுகின்றன இதுவுமன்றி திருமஞ்சன திரவிய மூலமாகவும் ஔஷதிரவிய மூலமாகவும் உதவுகின்றன விருட்சங்கள் செடிகள் கொடிகள் முதலானவைகளுமன்றி சில விருட்சங்கள் செடிகள் கொடிகள் சிவார்ச்சனைக்குரிய திருப்பள்ளித்தாமமூலமாக உதவுகின்றன திருப்பள்ளித்தாமமாவது பத்திரபுஷ்பம் இந்தப் புஷ்பங்கள் கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ புதற்பூ என நாலுவகையாயிருக்கின்றன கோட்டுப்பூ விருட்சங்களிலுண்டாவது கொடிப்பூ முல்லைமுதலாகிய கொடிகளிலுண்டாவது நீர்ப்பூ தாமரை நீலோற்பலம் செங்கழுநீர்முதலானவை புதல்புதர் இவ்

விரண்டும் ஒருபொருளைக் குறித்த சொற்கள்பல விசேஷத்தினால் குரிக்குருவி நாரையென்னும் பட்சிகளும் பன்றியும் மோட்சமடைந்தன இது வுமன்றி யானை காகம் சிலந்தி வானரம் தவளை அணில் எறும்புமுதலியவைகள் மோட்சமடை ந்தன திருஞானசம்பந்தசுவாமிகள் திருவொற் றியூரென்னுந் தலத்தில் ஆண்பனை பெண்பனை யாகுமட்டில் பதிகமருளிச் செய்தபோது அந் தப் பனைமரத்துக்கு மோட்சங் கிடைத்தது. ரத்னசாரியர்களில ஒருவராகிய உமாபதி சிவா சாரியர் சிதம்பரத்தில் ஒரு முள்ளிச் செடிக்குச் சுபதிட்சைசெய்ய அச்செடி அப்போத்தீய் ந்து மோட்சமடைந்தது.

௧௪அ-வது.

வினா. விருட்சசாதிகளுக்குயிரில்லையே அப்படியி ருக்க அவைகளுக்குச் சிவபுண்ணியங் கிடைக்கு மென்றும் அதனால் மோட்சமடையுமென்றும் சொல்வதெப்படி?

விடை. எண்பத்துநான்குலட்ச சீவபேதங்களிற் சரமெ ன்றும் அசரமென்றும் இரண்டு பிரிவுண்டு அவ்

விரண்டில் நடப்பதும் பறப்பதும் ஊர்வதுமாய் சீவன்கள் சரமென்றுஞ் சஞ்சாரிப்பில்லா மலிருக்கும் சீவன்கள் அசரமென்றுஞ் சொல்லப்படு சரம் அசரமென்பதற்கு ஸ்தாவரம் சங்கமம் என்றும்பெயர் சரிக்குமுயிர் தேவர் மனிதர் மிருகங்கள் பறக்குமுயிர் பக்ஷிசாதிகள் ஊருமுயிர் புழு முதலானதுகள் சரிக்காத உயிர்மலைகள் விருக்ஷாதிகள் அசரமாகிய இந்த உயிர்களுக்குப் பரிசமென்னும் ஓரறிவேயிருப்பதினால் ஓரறிவுயிரென்று பெயர் பரிசமென்பது தொடத்தல் அவைகள் தொட்டால் அறிந்துகொள்ளும்.

௧௪௬-வது.

வினா. சிவபுண்ணியம் உண்டாவதற் கேதுவாகிய சிவஸ்தலங்க ளின்னதென்று எவ்வாறு தெரியப் படும்.

விடை. சைவபுராணம் பத்துக்குட்பட்ட ஸ்தலபுராணங்களினாலும் தேவாரப்பதிகங்க ளிருப்பதினாலும் ஸ்தலமென்று தெரியப்படும்.

௧௫௰-வது.

விஞ. புராணங்களாற் சொல்லப்படும் ஸ்தலங்களுக்கெல்லாம் தேவாரமுண்டா?

விடை. பூர்வம எல்லா ஸ்தலங்களுக்குமே யிருந்தது இப்போது இருநூற்றெழுபத்துநாலு ஸ்தலங்களுக்கிருக்கின்றன.

௧௫௧-வது.

விஞ. இப்படியாக யிருக்கின்ற சிவஸ்தலங்கடோறும் எழுந்தருளித் தேவாரத் திருப்பதிகங்கள் பாடியருளிய சைவசமயாசாரியர்களுடைய போதனைகளைப்போல வகை தொகை விபரமாய் அந்தந்த சிவஸ்தலத்தின் திருத்தேவாரப் பதிகங்களைத் தாங்களும் வாசித்து உலகத்தார்களுக்குப் போதனை செய்யவேண்டிய போதகசக்தியை இப்போதிருக்கிற சிலபிரபல்லியமான ஆதினபாளர் கைகழுவவிட்டு வேறோர் கடமையிலிருக்கிறார்களே அதென்ன கடனென்ப நல்லவையெல்லாம் கடனறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு என்றிருக்க இதைமறந்து அப்படியவர்கள் செய்யவேண்டிய கடனைச் செய்யாமலிருக்கலாமா?

விடை. ஆம் அவர்கள் செய்யவேண்டிய கடனாகிய தமிழ்வேத பாராயணம் அல்லது திருத்தேவாரப் பணிவிடையைச் செய்யாமலும் தாங்கள் வாசிக்கத்தெரியாத பழடியர்களாகவும் சற்றிலனுயினுங் கேட்கவற்றொருவனை தொற்கத்தினார் ற்றுந் துணையென்றப்படி காதினற்கூட கேழ்க்க மனமில்லாமல் திருஅங்கமாலையின் திருப்பாடலிற் சொல்லியபடி தாங்கள் சைவசமயாசாரியராய் முன்னின்றவர்கள் நடக்க கடனென்பதை மறந்தபடியால் சைவாதீனபாளுடைய பந்தியில் அல்லது மயேஸ்பரபூசையில் ஸ்ரீவைஷ்ணவர்கள் பந்தியில் திருவாய்மொழி பிரபந்தஞ் சொல்லத் தெரியாதவர்களைப் பந்தியை விட்டு விலக்குவதுபோலத் தமிழ்வேதமாகிய திருத்தேவாரப் பதிகங்கள்வோத|தெரியாதவர்களை மயேஸ்வர பூசையின் பந்தியைவிட்டு விலக்கவேண்டியதா முன்புருவத்தலகில் புறக்கண்டு காமுறுவர் சற்றறிந்தார் பொறியின்மை யாருக்கும் பழியென்று சொல்லியிருக்கின்றபடியே அவர்கள் சுத்தமாய் நடவாமல் முழுமையுங்கைவிட்டு விட்டபடியினாலே சிலபெரியோர்

சைவசமயக் கட்டுப்பாடு செய்கிற சிரேஷ்ட த்துவம் பொருந்திய ஆதீன பராள்மாத்திரம் வித்தியா தருமர்களைச் செய்யாமல் ஏதுகாரணத்தால் சுத்தமாய்க் கைநழுவ விட்டுவிட்டார்கள் சிவக்கியானம் விளங்கும்படியான புத்தகங்களை தானமாகவாவது அல்லதுபாத காணிக்கை வாங்குகியதற்குப் பிரதி உபகாரமாக வர்வது கொடுக்காமல் நமபின சிஷர்களாகிய சைவசமயத்தவர்களை நட்டாற்றில் விடலாமா ? (சரணம் சரணமல்லவோ நான் காணேன்) என்ற வாக்கியத்தை சாட்சியாக வைத்துக்கொண்டு வித்தியா தருமத்தை அல்லதுமன்னுவான் மறைகளோதி மனத்திருள் விளக்கொனறே கதியென்ற படி கலக்கியானத்தை அபிவிர்த்திசெய்யும்படி ஏச்சரிக்கை செய்கினறனம்.

தெய்வீகமாய் விளங்கிய அநாதி சைவசமயாசாரியர்களாகிய மூவர்கள் முத்திக்குக் காரணமாகிய எவவகையும்விளங்க திருவாய்மலர்ந்தருளிய தமிழ்வேதமாகிய தேவாரப் பாடல்பெறற மகாதேவ ஸ்தலத

திருநாமங்களும், அத்தேவாலய யாத்திரைசெய்பவர்களுக்குவழிகாட்டியாக அத்தேவாலயங்களிருக்கின்ற கடிகைவழி அளவைப் பிரமாணங்களும் சிவபெருமான் ஒவ்வொரு சிவஸ்தலத்தில் நடாத்திய அற்புதங்களும் ஒவ்வொரு சிவஸ்தலத்துக்கு இத்தனைத் தேவாரத்திருப்பதிகங்களிருக்குதென்னும் புண்ணிய நதிகள் தீர்த்தங்களின் திருநாமங்களும் ஒவ்வொரு அடியார்கள் அவதரித்த ஸ்தலங்கள் சென்மித்தமாதங்கள் திருநட்சத்திரங்கள் அவரவர்கள் செய்தத்தவங்கள் வைராக்கியமாகிய திருத்தொண்டுகள் முத்திபெற்ற சிவஸ்தலங்கள் மாதங்கள் திருநட்சத்திரங்கள் முதலாகியனவும் வருமாறு காண்க.

## சிவஸ்தலத்திருநாமமாலை.

சோழவளநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் நூற்றுத் தொண்ணூற்றில் காவிரியாற்றுக்குவடகரையிலுள்ள சிவஸ்தலங்கள் அறுபத்துமூன்றினில ஒன்றுக்கொன்றிருக்கின்ற கடிகைவழி அளவைப் பிரமாணங்களும் விபரமாயக் கண்டுகொள்ளும்படிவருமாறு.

கோயில்-௧-ஆ-சிதம்பரத்தில்சபாநாயகர்திருமூலஸ்தானர் சிவகாமிஅம்மைஉமையம்மை கனகசபைசபா

நாயகர் பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலான சமஸ்த தேவதைகளுந் தொழவுஞ்சிவகாமசவுந்தரி காணவும் சர்வதாகாலமும்போம் பலர்சபைக்கதிபதியாய்சிற்சபையிலிருந்து ஆனந்ததாண்டவஞ்செய்யாநின்றதலம்அர்த்தசாமத்தில் சமஸ்தலத்திலே யிராநின்றசிவகலைகளுமவந்தொடுங்காநின்றதலம் தில்லைமூவாயிரவர்சிவபெருமானைப் பூசிக்காநின்றதலம் திருநீலகண்டநாயனார் சித்திரைமீ° கார்த்திகை நட்சத்திரத்தில் திருஅவதாரஞ்செய்தவர் மாபுதிருநீலகண்டனென ஆணைக்கஞ்சியிளமையிற் பெண்ணாசை விட்டுவிட்டு விருத்தாப்பியத்தில் சிவபெருமானுடைய திருவருளினால் யௌவனத்தையடைந்து வெகுகாலம் வாழ்ந்திருந்து தைமீ° விசாக நட்சத்திரத்தில் முத்தியடைந்த தலம் திருநாளைப் போவார்நாயனார் புரட்டாசிமீ° உரோகணியில் சிவபெருமானுடைய திருவருளினால் அக்கினியில்மூழ்கி முனிவடிவாகித் திருச்சபையிற் கலந்ததலம்சிவகங்கை முதலாயுள்ள தீர்த்தங்களையுடையது திருப்பதிகங்கள் ௰௧-அதற்குகிழக்கு-௩-கடிகைவழிதூரத்தில்.

திருவேட்களத்தில் என்பது-மூங்கில்வனத்தில்.

பாசுபதயீசுவரர்நல்லநாயகியம்மை திருப்பதிகம்-௨. அதற்குதென்மேற்கு-௩ கடிகைவழிதூரத்தில்.

திருநெல்வாயில்-எ-து சிவபுரியில் உச்சிநாதேசுவரர் கனகாம்பிகையம்மை திருப்பதிகம்-க- அதற்கு தெற்கு-வ-கடிகைவழி.

திருக்கழிப்பாலையில்-எ-து காரைமேட்டில்பால் வண்ணேசுவரர் பொற்பதவேதநாயகிதிருப்பதிகம்-அ அதற்குதென்கிழக்கு-க-கடிகைவழி.

திருமயேந்திரப்பள்ளியில்-எ-து கோவிலடிப்பாளையம்திருமேனியழகர் வடிவாளம்மைதிருப்பதிகம்-க அதற்குதென்மேற்கு-ரு-கடிகைவழி.

திருப்பெருமணத்தில் எ-து ஆச்சாபுரத்தில் சிவலோகத்தியாகேசர் நங்கையுமையம்மை திருஞானசம்பந்த சுவாமிகள் திருநீலகண்டத்து யாழ்ப்பாணநாயனார்முருகநாயனார்-திருநீலநக்கநாயனார் முதலாகியவர்களும்மற்றுந் திருமணக்கோலத்தெரிசனத்திற்குவந்தவர்களெல்லாம்வைகாசி மூலநட்சத்திரத்தில்சோதியிற்கலந்ததலம் திருப்பதிகம் க-அதற்கு தென்மேற்கு-ரு-கடிகைவழி.

திருக்கோலக்காவில் சப்தபுரீசுவரர் ஓசைகொடுத்தயம்மை திருப்பதிகம்-உ. திருஞானசம்பந்தசுவாமி

களுக்குப் பொற்றாளங்கொடுத்தஸ்தலம் அதற்குகிழக்கு-உ-கடிகைவழி.

திருச்சீர்காழியில் எ-ஆ திருக்கழுமலத்தில் திருத்தோணிபுரத்தில் திருப்பிரமாபுரத்தில் பிரமாபுரீசுவரர் திருநிலைநாயகியம்மை ஆவணிமீ திருவாதிரையில் திருஞானசம்பந்தசுவாமிகள் திருவவதாரம்வைதிகப்பிராமணர்மரபு அரனைப்பாடுந் திருத்தொண்டுபுனலிலேயெதிர்செல்லெனச்செலவுமேயுத்தனர் தலைத்தெனத்தக்குமே, கனலிலேயிடப்பச்சென்றிருக்குமே கதவமாமறைக்காட்டிலடைக்குமே, பனையிலாண்பனைபெண்பனையாகுமே, பழையவென்புபொற் பாவையதாகுமே, சினவராவிடந்தீரெனத்தீருமே, சிறந்தசம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே, வைகாசிமீ மூலத்தில் திருப் பெருமணத்திற் சோதியிலொடுக்கமானது ஆனிமீ இரேவதியில் கணநாத நாயனார் திரு அவதாரம் வைதிகபிராமணர்மரபு இல்லறம் அரனுக்கு நந்தவன முதலியதும் பலரைக் கொண்டு செய்வித்தலுஞ் தாஞ்செய்தலுந் திருத்தொண்டு பங்குனிமீ திருவாதிரையில் முத்தியடைந்தது எக-திருப்பதிகம் அதற்கு கிழக்கு ந-கடிகைவழி.

திருக்குருகாவூரில் திருமேனி வெள்ளடைகாவியங் கண்ணியம்மை திருப்பதிகம்-௨ அதற்கு கிழக்கு-௨ கடிகைவழி.

திருமுல்லை வாயில் ௭-து தென் திருமுல்லைவாயி லில் முல்லைவனநாதர் கோதையம்மை திருப்பதிகம்-௧ அதற்கு தெற்கு-௩ கடிகைவழி.

திருக்கலிக்காமூரில் ௭-து அன்னப்பன் பேட்டை யில் சுந்தரேசர் அழகுவன முலையம்மை திருப்பதி கம்-௧ இதற்கு தென்கிழக்கு-௧ கடிகவழி.

திருச்சாய்க்காட்டில் ௭-து சாயாவனத்தில் சாயா வனேசுவரர் குயிலினும் நன்மொழி யம்மை திருப் பதிகம்-௪ அதன் மேற்கு ஒ-கடிகைவழி.

திருப்பல்லவனீச்சரத்தில் ௭ து சங்குமுகத்து றைகாவிரிப்பூம் பட்டினத்தில் பல்லவனப் பூரணீச் வரர் சௌந்தரியம்மை திருப்பதிகம்-௨. இயற்பகை நாயனார் [illegible] பூசநட்சத்திரத்தில் திரு அவதாரம் வணிகர் மரபு இல்லறமாய்த் துறவு சிவபெருமான் அடியாராய்வந்து பத்தினியைக் கேழ்க்கக் கொடுத்து அதைத் தடுத்த பந்துக்களை வெட்டின சிறந்த திருத்

தொண்டரால் மார்கழியில் உத்திரத்தில் சிவபூசையடை க்கு அதற்கு மேற்கு ரு-கடிகைவழி.

திருவெண்காட்டில் சுவேதாரணியேசுவரர் பிரம வித்தியாநாயகி திருப்பதிகம்-௰ கசராபுராதகிசுவரசி சநைடய கோவைபத [illegible] முரு[illegible] [illegible] தலம அயிரசவதம [illegible] தாருராசுரை ஒத்துப்போட்ட சொமமை பெறற ஸத்மம முக குளம் அதற்கு மேற்கு-ய கடிகைவழி.

திருக்காட்டுப்பள்ளியில் ஆரணியசுந்தரர் அகிலாண்டநாயகி திருப்பதிகம்-௪ அதற்கு மேற்கு-எ-கடிகைவழி.

திருக்கடைமுடியில்-எ-து கிழர் சடைமுடிஈசுவரர் அபிராமியம்மை திருப்பதிகம்-க அதற்கு வடமேற்கு-உ கடிகைவழி.

திருக்குறுமாணக் குடியில் எ-து கண்ணார்கோயிலில் கண்ணாயிரயீசுவரர் முருகுவளர் கோதையம்மை திருப்பதிகம் அதற்கு வடமேற்கு-ரு கடிகைவழி.

திருவயித்தீசுவரர் கோயில் எ-து திருப்புள்ளிருக் கும வேளூரில் வயித்தியநாதயீசுவரர் தையல்நாயகி

யம்மை சடாயுசம்பாதி பூசித்த ஸ்தலம் சிற்றுமிர்தம் திருப்பதிகம்-௫ அதற்குதெறகு-௫கடிகைவழி.

திருநின்றயூரில் மாலட்சுமியீசுவரர் உலக நாயகி யம்மை திருப்பதிகம்-௪ அதற்கு மேற்கு-௫ கடிளகை வழி.

திருப்புன்கூரில் சிவலோகயீசுவரர்சொக்கநாயகி யம்மை திருநாளைப்போவார் நாயனாருக்கு நந்தியை விலக்கச்செய்து சிவபெருமானை தரிசனங்கொடுத்தஸ் தலம் திருப்பதிகம் - ௩ - அதற்கு தெற்கு - ௭ - கடிகைவழி.

திருநீடூரில் அருட்சோமநாதயீசுவரர் வேயுறு தோளியம்மை திருப்பதிகம் - புரட்டாசிமீ மகத்தில் முனையாடுவார்நாயனார் திரு அவதாரம்வேளாளர்மரபு கூலிக்கியுத்தம்பண்ணி அதிற் பெருங்கூலிப் பொருளையடியார்களுக்குச் செலுத்தி பங்குனிமீ பூசத்தில் முத்தியடைந்தவர் அதற்கு தென்மேறகு-௭-கடிகை வழி தூரத்தில்.

திருஅன்றியூரில் ஆபத்சகாயயீசுவரர் பெரியநாயகியம்மை திருப்பதிகம்-௨-அதற்குதெற்கு-௧-கடிகை வழி.

திருவேள் விக்குடியில் கலியாணசுந்தர யீசுவர் பரிமளசுகந்த நாயகிம்மை திருப்பதிகம்-உ- அதறகு வடமேற் கு-வ-கடிகைவழி.

திரு எதிர்கொள்பாடியில் அயிராவத யீசுவரர் மலர்குழ வனமாது திருபபதிகம -க- அறகு மேற்கு வ-கடிகைவழி.

திருமணஞ்சேரியில் அருள்வள்ளநாயகயீசுவரர் யாழினமொழியாமை திப்பதிகம -உ- குலச்சிறைநாய ஞர காயநிலைகயிீ மூலத்தில, திருஆயதாரம் அடியார்க்கினியனசெய்து வழிபாட்டவா ஆவணியீ அனு ஷநட்சத்திரத்தில மோட்ச மடைந்தவர் அதறகு மேறகு-க-கடிகைவழி.

திருக்குறுக்கையில் வீரட்டியீசுவரர் ஞானம்பிகை யம்மை திருபபதிகம்-உ-அட்டவீரத்திலொன றுமன மததகனம் அதற்குவடமேற்கு-க-கடிகைவழி.

திருக்கருப்பறியலூரில் -எ- து - தலைநாயிரில்மேலை காழியில்குற்றம் பொருத்த யீசுவரர் கோல்வளையம் மை திருப்பதிகம்-உ-அதற்குமேறகு-க-கடிகைவழி.

திருக்குரக்குக்காவில் கொந்தளயீசுவரர் கொந்தளநாயகியம்மை திருப்பதிகம்-க-அதற்குத் தென்மேற்கு ரு-கடிகைவழி.

திருவாழ் கொளிபுத்தூரில் மாணிக்கவண்ணயீசுவரர் வண்டார்பூங்குழலம்மை திருப்பதிகம்- ரு-அதற்குமேற்கு-க-கடிகைவழி.

திருமண்ணிப் படிக்கரையில் - ச - ரு- இவ்விப்பைப் பட்டில் நீலகண்ட யீசுவரர் அமிர்தகரவல்லியம்மை திருப்பதிகம்-அதற்கு வடக்கு-க-கடிகைவழி.

திருஓமாம்புலியூரில் துயரந்தீர்த்த யீசுவரர் பூங்கொடியாம்பிகையம்மை திருப்பதிகம்-உ - அதற்குகிழக்கு-க-கடிகைவழி.

திருக்கானாட்டு முள்ளூரில் பதஞ்சலிநாத யீசுவரர் கோல்வளைக்கையம்மை திருப்பதிகம்-க-அதற்கு வடகிழக்கு-வ-கடிகைவழி.

திருநாரையூரில் சவுந்தரயீசுவரர் திரிபுரசுந்தரியம்மை நம்பியாண்டார்நம்பி விக்கினேசுவரரைப் பூசித்து அருள்பெற்றஸ்தலம் திருப்பதிகம்-ர- அதற்குமேற்கு க-கடிகைவழி.

திருக்கடம்பூரில்-எ-து - மேலக்கடம்பூரில் அமிர்தகடநாயக யீசுவரர் சோதிமின்னம்பாலம்மை திருப்பதிகம்-ங-அதற்குத்தெற்கு-அ-கடிகைவழி.

திருப்பந்தணைநல்லூரில் பசுபதி யீசுவரர்காம்பன்னதோளியம்மை திருப்பதிகம்-உ-அதற்குமேற்கு - வ கடிகைவழி.

திருக்கஞ்சனூரில் அக்கினியீசுவரர்கற்பகநாயகியம்மை திருப்பதிகம்-சு-அதற்குமேற்கு-வ-கடிகைவழி.

திருக்கோடிகாவில் கோடிகா யீசுவரர் வடிவுடைவாழ்வாளம்மை திருப்பதிகம்-ச-அதற்குமேற்கு - வ-கடிகைவழி.

திருமங்கலக்குடியில் பிராணவரதயீசுவரர் மங்களநாயகியம்மை-திருப்பதிகம்-உ-அதற்குவடமேற்கு-ங-கடிகைவழி.

திருப்பனந்தாளில் சடையப்பயீசுவரர் பெரியநாயகியம்மை சிவபெருமான் தலைச்சிக்கி வணங்கக் குங்கிலியக்கலைய நாயனருக்கு நிமிர்ந்ததலம திருப்பதிகம் ச-அதற்குமேற்கு-உ-கடிகைவழி.

திருவாப்பாடியில் பாலுகந்தயீசுவரர் பெரிய நாயக வல்லியம்மை திருப்பதிகம்-௪-அதற்குமேற்கு- ௨-கடி கைவழி.

திருச்செந்தூரில் கிரியீசுவரர் ஜெகதேவியம்பாளம் மை திருப்பதிகம் வைகாசியீ திருவாதிரையில் தண் டீசப்பிள்ளைநாயனார் திரு அவதாரம் சைந்திசப்பிரா மணர்மரபு பிரமசாரி ஆனினங்களைப் பாதுகாத்து ஆன்பாற் றிருமஞ்சன வபிஷேகஞ்செய்து அரனைப் பூசித்தல் திருத்தொண்டு அந்த உடலோடும் தையீ உத்திரத்தில் அரனிடத்தில் வீற்றிருந்தது அதற்கு மேற்கு-௨-கடிகைவழி.

திருத்தேவன்குடியில் கற்கடகயீசுவரர் அருமருந் தாளம்மை திருப்பதிகம் - க் - அதற்குதெற்குக் - கடி கைவழி.

திருவிய லூரில் ஏகாந்தநாதயீசுவரர் சவுந்தர நாய கியம்மை திருப்பதிகம்-௪- அதற்கு தென்மேற்கு-௨-க டிகைவழி.

திருக்கோட்டையூரில் கோடி யீசுவரர் பந்தாடும் நாயகியம்மை திருப்பதிகம்-௪- அதற்குமேற் கு-௪-கர் கைவழி திரு இன்னம்பரில் அம்பாமூர்த்தி யீசுவரவடி

கொங்கார் பூங்குழலியம்மை திருப்பதிகம்-ரு-அதற்கு வடகிழக்கு-க-கடிகைவழி.

திருப்புறம்பயத்தில் சாட்சிநாதேசுவரர் சொர்ண நாயகியம்மை திருப்பதிகம்-ரு- அதற்குமேற்கு-க கடிகைவழி.

திருவிசயமங்கையில் விசயநாதேசுவரர் மங்கைநாயகியம்மை திருப்பதிகம்-உ- அதற்குமேற்கு-க-கடிகைவழி

திருவைகாவூரில் எ-து-வில்வவனத்தில் வில்வவனேசுவரர் பூவைவல்லியம்மை திருப்பதிகம்-க-அதற்கு மேற்கு க-கடிகைவழி.

திருக்குரங்காடுதுறையில்-எ-து- வடகுரங்காடுதுறையில் குலைவணங்கேசுவரர் அழகுசடைநாயகியம்மை வாலி பூசித்த ஸ்தலம் திருப்பதிகம்-க-அதற்கு மேற்கு-கஉ-கடிகைவழி.

திருப்பழனத்தில் ஆபத்சகாயேசுவரர் பெரியநாயகியம்மை திருப்பதிகம்-ரு அதற்கு மேற்கு-க கடிகைவழி.

திருவையாற்றில் செம்பொற் சோதீசுவரர் அறம்வளர்த்த நாயகியம்மை நந்திகேசுவரர் பூசித்த [illegible]

பர் சுவாமிகளுக்குச் சராசரமெல்லாஞ் சிவனுஞ் சத்தியுமாய்த் தோன்றிய நகரம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு காவிரி வெள்ளத்தை ஒதுக்கியருளிய நாயகன் திருப்பதிகம்-கஅ அதற்கு-வ கடிகைவழி.

திருநெய்த்தானத்தில் -எ-து தில்லைத் தானத்தில் நெய்யாடியப்பரீசுவரர் வாலாம்பிகையம்மை திருப்பதிகம்-௯ அதற்கு வடமேற்கு-க கடிகைவழி.

திருப்பெரும்புலியூரில் வியாக்கிரபுரீசுவரர் சவுந்தரநாயகியம்மை திருப்பதிகம்-க அதற்கு வடமேற்கு க-கடிகைவழி.

திருமழபாடியில் வச்சிரதம்பேசுவரர் அழகாம்பிகையம்மை திருப்பதிகம்-௯ அதற்கு மேற்கு-க கடிகைவழி.

திருப்பழுவூரில் எ-து மேலப்பழுவூரில் வடமூலநாதயீசுவரர் அருந்தவநாயகியம்மை பழுவூரட்டவீரட்டத்திலென்று ஆனையுரித்தது திருப்பதிகம்-க அதற்கு-௫ கடிகைவழி.

திருக்கானூரில் செம்மேனியப்பரீசுவரர் சிவயோகநாயகியம்மை திருப்பதிகம்-உ அதற்கு வடமேற்கு-க கடிகைவழி.

திருப்போன் பிலாலந் துறையில் எ - து திருமா லயன் துறையில் சத்தியவாகீசுவரர் சவுந்தரியாம்மை திருப்பதிகம்-உ அதற்கு மேற்கு-ங கடிகைவழி.

திருமாந் துறையில் ஆம்பரவனேசுவரர் அழகிஆ யர்ந்தாளம்மை திருப்பதிகம்-க அதற்கு தென்மேற்கு க-கடிகைவழி.

திருப்பாற்றுறையில் திருமூலநாதயீசுவரர் மேகாம்பிகையம்மை திருப்பதிகம் - க - அதற்கு தெற்குக் கடிகைவழி.

திருவானைக்காவில் எ-வது சம்புகேசுவரத்தில் சம்புகயீசுவரர் அகிலாண்டயீசுவரியம்மை வெள்ளானையுஞ் சிலந்திபூச்சியுஞ் சிவபெருமானை பூசித்து முத்தியுடைந்தஸ்தலம் சோழன்கழுத்திலிருந்து காவிரியில் விழுந்துபோன முத்துமாலிகை அபிஷேகத் திருமஞ்சனத்தில் வரப்பண்ணி தரித்துக்கொண்ட ஸ்தலம் சிவபெருமான் திருக்கரத்தினால் கூலியாகத் திருநீரளித்துச் செய்வித்த நீரிட்டான் மதிலுள்ள அப்புலிங்கம் சம்புநாவல்மரம் திருப்பதிகம் - எ அதற்குவடமேற்கு-அ கடிகைவழி.

திருப்பைஞ்ஞீலியில் மாற்றறிவாக ஸ்ரீசுவரர் வாலசவுந்தரியம்மை அப்பர் சுவாமிகளுக்குச் சிவபெருமான் கட்டமுது கொடுத்து பதிகங்கொண்ட ஸ்தலம் திருப்பதிகம் - ௪ அதற்கு வடக்கு-௩ கடிகைவழி.

திருப்பாச்சிலாக்கிராமத்தில் ௭ - ஆ திருவாசியில் நீலகண்ட ஸ்ரீசுவரர் விசாலாட்சியம்மை திருஞானசம்பந்த சுவாமிகள் மழவராசன் பெண்ணுக்கு முயலகன் வியாதியைத் தீர்த்த ஸ்தலம் திருப்பதிகம் - ௨ அதற்கு மேற்கு-௧௦ கடிகை.

திருஈங்கோய் மலையில் மரகதாசல ஸ்ரீசுவரர் மரகதவல்லியம்மை திருப்பதிகம்-௧ அதற்கு கடிகை வழியில் திருவாட்போக்கி.

வடகரையில் சிவஸ்தலத் திருநாமங்கள்

அறுபத்துமூன்றாம்.

முற்றிற்று.

---

சோழவளநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் நூற்றுத் தொண்ணூற்றில் காவேரியாற்றுக்குத் தென்கரையிலுள்ள சிவஸ்தலங்கள்.

கஉ-எ-ன் திருநாமங்களாவன.

திருவாட்போக்கியில் எ-வது இரத்தினகிரி மலையில் இரத்தினகிரியீசுவரர் சுரும்பார்குழலியம்மை திருப்பதிகம்-க அதற்குவடகிழக்கு-ரு கடிகைவழி தூரத்தில்.

திருக்கடம்பந்துறையில் புராத்துறைநாத ஈசுவரர்முற்றிலா முலையம்மை திருப்பதிகம்-க அதற்கு கிழக்கு-க கடிகைவழி.

திருப்பராய்த்துறையில் பராய்த்துறைநாத ஈசுவரர்பொன்மயிலாம்பிகை திருப்பதிகம்-உ அதற்கு கிழக்கு-ரு கடிகைவழி.

திருக்கற்குடியில் உச்சிவரதநாயக ஈசுவரர் அஞ்சனாட்சியம்மை திருப்பதிகம்-ரு அதற்கு கிழக்கு-க கடிகைவழி.

திருமூக்கீச்சரத்தில் எ-வது உறையூரில பஞ்சவர்ணேசுவரர் காந்தியம்மை திருப்பதிகம்-க அதற்குகிழக்கு-க கடிகைவழி;

திருச்சிராப்பள்ளியில் தாயுமானஈசுவரர் மாதுருபூதீசுவரர் மட்டுவார்குழலியம்மை கயிலாயத்துக்கொடிமுடி செவ்வந்திபுட்பத்துக்காக சிவபெருமான்மேற்குமுகமான ஸ்தலம ஒருபத்தைக்கு சுவாமிதயாராய்வந்து மருத்துவம் பார்த்த ஸ்தலம் திருப்பதிகம்-௨ அதற்கு தென்கிழக்கு-௫ கடிகைவழி.

திருவெறும்பியூரில் எறும்பீசுரர் நறுங்குழல்நாயகியம்மை உறும்புகளெந்தம் பூசித்த ஸ்தலம திருப்பதிகம்-௨ அதற்கு கிழக்கு-௫ கடிகைவழி.

திருநெடுங்களத்தில் நித்தியசுந்தரஈசுவரர ஒப்பிலாநாயகியம்மை திருப்பதிகம்-௧ அதற்கு கிழக்கு-௫ கடிகைவழி.

திருமேலைக்காட்டுப் பள்ளியில் தீயாடியப்பஈசுவரர் வார்கொண்ட முலையம்மை திருப்பதிகம்-௨ அதற்குவடகிழக்கு-௬ கடிகைவழி.

திருவாலம்பொழிலில் ஆத்மநாதஈசுவரர் ஞானாம்பிகையம்மை திருப்பதிகம் ௧ அதற்கு கிழக்கு ௧ கடிகைவழி.

திருப்பூந்துருத்தியில் புட்பவனநாதஈசவரர் அழகாலமர்ந்தம்மை திருப்பதிகம் ௫ அதற்கு கிழக்கு-௧ கடிகைவழி.

திருக்கண்டியூரில் வீரட்டானேசுவரர் மங்கைநாயகியம்மை அட்ட வீரட்டத்திலொன்று பிரமன் சிரங்கொய்தது திருப்பதிகம்-ச அதற்கு கிழக்கு-க கடிகைவழி.

திருச்சோற்றுத்துறையில் தொலையாச்செல்வேசுவரர் ஒப்பிலாம்பிகையம்மை திருப்பதிகம்-எ அதற்குத்தென் கிழக்கு-வ கடிகைவழி.

திருவேதிகுடியில் வேதபுரீசுவரர் மங்கையர்க்கரசியம்மை திருப்பதிகம்-உ அதற்குத் தென்கிழக்கு-க கடிகைவழி.

திருத்தென்குடித்திட்டையில் பசுபதீசுவரர் உலகநாயகியம்மை திருப்பதிகம்-க அதற்கு வடக்கு கஅ கடிகைவழி.

திருப்புள்ளமங்கையில் பசுபதிநாதேசுவரர் பால்வளைநாயகியம்மை திருப்பதிகம்-க அதற்கு வடகிழக்கு ஏழுமுக்கால் கடிகைவழி

திருச்சக்கரப்பள்ளியில்-இது ஐயம்பேட்டையில் ஆலந்துறைநாதர் அல்லியங்கோதையம்மை திருப்பதிகம் க அதற்குத்தென்கிழக்கு-க கடிகைவழி.

திருக்கருகாவூரில் முல்லைவனேசுவரர் கரும்பனையாளம்மை திருப்பதிகம்-௨ அதற்கு வடகிழக்கு-௧ கடிகைவழி.

திருப்பாலைத்துறையில் பாலைவனநாதேசுவரர் தவளவெண்ணகையம்மை திருப்பதிகம்-௧ அதற்கு கிழக்கு-௧ கடிகைவழி.

திருநல்லூரில் பெரியாண்டேசுவரர் திரிபுரசுந்தரியம்மை அப்பர்சுவாமிகளுக்குத் திருவடி சூட்டியதலம் திருப்பதிகம்-௫ அதற்குகிழக்கு-௪ கடிகைவழி.

திருஆவூரில்-௭ வது திருஆவூர் பசுபதீச்சரத்தில் பசுபதீசுவரர் மங்களநாயகியம்மை பசுபூசித்ததலம் திருப்பதிகம்-௧ அதற்குகிழக்கு-௪ கடிகைவழி.

திருச்சத்திமுற்றத்தில் சிவக்கொழுந்தீசுவரர் பெரியநாயகியம்மை ஈசுவரிபூசித்ததலம் திருப்பதிகம்-௧ அதற்கு கிழக்கு-௪ கடிகைவழி.

திருப்பட்டீச்சுரத்தில் பட்டீசுவரர் பாலவளைநாயகியம்மை திருஞானசம்பந்த சுவாமிகளுக்குச் சிவபெருமான் முத்துப்பந்தர் கொடுத்ததலம் திருப்பதிகம்-௧ அதற்குகிழக்கு-௪ கடிகைவழி.

திருப்பழைய ஆறையில் எ-து பழையாறையூரில் சோமீசுவரர் சோமகலைநாயகியம்மை அப்பர்சுவாமிகளுக்காகச் சமணர்களாலே மறைக்கப்பட்ட சிவபெருமான் வெளிப்பட்டு தெரிசனங் கொடுத்த ஸ்தலம் திருப்பதிகம் க- அதற்குகிழக்கு வ-கடிகைவழி.

திருவடதளியில் வடதளிநாயகேசுவரர் கஹரியாம்பிகையம்மை திருப்பதிகம் க அதற்கு வடகிழக்கு வ-கடிகைவழி.

திருவலஞ்சுழியில் கற்பகநாதேசுவரர் பெரியநாயகியம் திருப்பதிகம் கூ-அதற்குகிழக்கு ௩-கடிகைவழி.

திருக்குடமூக்கில் எ-து கும்பகோணத்தில் கும்பேசுவரர் மங்களநாயகியம்மை மாசிமாதத்தில் கொங்கைவரும் தீர்த்தத்தை யுடையதலம் திருப்பதிகம் -உஅ தெற்குகிழக்கு வ கடிகைவழி.

திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத்தில் மடந்தைபாகேசுவரர் பெரியநாயகியம்மை திருப்பதிகம் க-அதற்கு கிழக்கு வ கடிகைவழி.

திருக்குடந்தை காரோணத்தில் சோமநாதேசுவரர் தேனார்மொழியம்மை திருப்பதிகம் க-அதற்குதென்கிழக்கு இரண்டேமுக்கால் கடிகைவழி.

திருநாகேச்சரத்தில் சண்பகாரண்ணிய ஈசுவரர் குன்றுமுலைநாயகியம்மை சேக்கிழார் நாயனார் வழிபட்ட தலம் திருப்பதிகம் கூ - அதற்கு கிழக்கு ஒன்றேமுக்கால் கடிகைவழி.

திருவிடைமருதூரில் எ-து மத்தியாற்சுனம் மருதப் பாஈசுவரர் நல்முலைநாயகியம்மை சிவபெருமான்வரகுண பாண்டியருக்கு பிரமஹத்தியை நீக்கி அவாபத்தினியை உள்கொண்டதலம் மருதமரம திருப்பதிகம் கஉ-அதற்குகிழக்கு க கடிகைவழி.

திருத்தென்குரங்காடு துறையில் ஆபத்சகாய ஈசுவரர பவழக்கொடி யமபிகை சுகரீபன்பூசித்தலம் திருப்பதிகம உ-அதற்குத்தெற்கு க-கடிகைவழி.

திருநீலக்குடியில் நல்லநாயக ஈசுவரர் அழகாம்பிகையமமை திருப்பதிகம க-அதற்கு தெற்கு க-கடிகைவழி.

திருவைகல் மாடக்கோயில் கோமளஈசுவரர் இளங்கோதையமமை திருப்பதிகம க அதற்கு வடகிழக்கு க-கடிகைவழி.

திருநல்லத்தில் மாமணிஈசுவரர் மங்கள நாயகியம்மைதிரு பதிகம் உ-அதற்குவடக்குழக்கு ரு-கடிகைவழி.

திருக்கோழம்பத்தில் கோகிலேசுவரர் சவுந்தரநாயகியம்மை திருப்பதிகம் ௨-அதற்குவடகிழக்கு ௩ கடிகைவழி.

திருவாவடுதுறையில் மாசிலாமணித்தியாகேசர் ஒப்பிலாமுலையம்மை திருஞானசம்பந்த சுவாமிகளுக்குப்பொற்கிழிகொடுத்ததலம் நாலடிமே லீரடிவைப்புபாடினதலம் திருமூலநாயனார் மூவாயிரம் வெண்பாபாடி முத்திபெற்றதலம் பசுபூசித்தலம் திருப்பதிகம் ௮-அதற்கு வடகிழக்கு ௩-கடிகைவழி.

திருத்துருத்தியில் குத்தாலத்தில் வேதீசுவரர் முகழாம்பிகையம்மை திருப்பதிகம் ௩-அதற்குகிழக்கு ௫-கடிகைவழி.

திருவழுந்தூரில் தேவபுரீசுவரர் சவுந்தராம்பிகையம்மை திருப்பதிகம் ௧-அதற்குகிழக்கு ௨-கடிகைவழி.

திருமாயூரத்தில் எ-து திருமயிலாடுதுறையில்மயூரநாதசுவரர் அஞ்சனாயகியம்மை ஈசுவரிமயிலாயி சிவபெருமானைப் பூசித்ததலம் திருப்பதிகம் ௩-அதற்கு வடகிழக்கு ௧-கடிகைவழி.

திருவிளநகரில் துறைகாட்டும்வள்ளல் நாதர் தோழியம்மை திருப்பதிகம் ௧-அதற்கு தென்கிழக்கு ௨-கடிகைவழி.

திருப்பறியலூரில் வீரட்டேசுவரர் இளங்கொடியா ளம்மை அட்டவீரட்டத்தி லொன்று தக்கனுடைய யாக மழித்தது திருப்பதிகம் க-அதற்கு தென்கிழக்கு ரு-க டிகைவழி.

திருச்செம்பொன் பள்ளியில் சொர்ணபுரீசுவரர் சுகந்தவ னநாயகியம்மை திருப்பதிகம் ரு-அதற்குவடக்கு அரை கடிகைவழி.

திருநனிபள்ளியில் நற்றுணையப்பயீசுவரர் பர்வதராஜ புத்திரி திருப்பதிகம ரு-அதற்கு வடகிழக்கு உ-கடிகை வழி.

திருவலம்புரத்தில் வலம்புரிநாதயீசுவரர் வடுவகிர மமை திருப்பதிகம் ச-அதற்கு வடகிழக்கு ரு-கடிகை வழி.

திருத்தலைச்செங்காட்டில செங்கருகாதயீசுவரர் சவுந்தரியமமை திருப்பதிகம் க-அதற்கு கிழக்கு க-கடிகை வழி.

திருஆக்கூரில் எ-து தான்றோன்றி மாடம் சுயம்புநா தயீசுவரர் கட்கநேத்திரியம்மை புரட்டாசிமீ அவிட்ட த்தில் சிறப்புலிநாயனர் திரு அவதாரம் வைதிகப் பிரா

